**கந்து** - கம்பம், 'கந்துமுனிந் துயிர்க் கும் யானை' கஎஅ; 'களிறு - கந்து சேர்பு நிலைஇ வழங்க' உஉ; தறி, 'நெடுநல் யானைக்குக் கந்தாற் றாவே' ருஎ; பறறுக்கோடு, 'மறங்கந் தாக நல்லமர் வீழ்ந்த நீள்கழன் மறவர்' கூகூ; 'நட்புக் கந்தாக' உகஎ.

**கபிலர்** - சங்கப்புலவருளொருவர்; இவர் அந்தணர்; 'புலனழுக் கற்ற வந்த ணாள, னிரந்துசென் மாக்கட் கினி யிட னின்றிப், பரந்திசை நிற்கப் பாடினன்' கஉசு; 'பொய்யா நாவிற் கபிலன் பாடிய, மையணி நெடுவ ரை' கஎச.

**கம்பலை** - ஆரவாரம், 'அழுவிளிக்கம் பலை' எ.

**கமழ** - பரக்க, 'வியலிடங் கமழ விவ ணிசை யுடையோர்க்கு' ருO.

**கயம்** - நீர்நிறைந்தபள்ளம், 'கயத்திட்ட வித்து' கூஎ.

**கரக்கினும்** - மறைக்கினும், 'தன்னு ளடக்கிக் கரக்கினுங் காக்கும்' க.

**கரகம்** - குண்டிகை, 'நீரற வறியாக் கரகத்து' க.

**கரப்பு** - மறைத்தல், 'கரப்பி லுள்ள மொடு' கூச.

**கராம்** - முதலை, 'ஈர்ப்புடைக் கராஅத் தன்ன வென்னை' கOச; முதலையுள் ஒருசாதி, 'கராஅங் கலித்த குண்டு கண் ணகழி' கூஎ.

**கரிகால்வளவன்** - ஒருசோழன், 'களி யியல் யானைக் கரிகால வளவ' சுசு.

**கரு** - கருப்பம், 'மாணிழை மகளிர் கருச்சிதைத் தோர்க்கும்' கூச; முட் டை, 'புறவுக் கருவன்ன புன்புல வரகு' கூச.

**கரும்பனூர்** - ஓரூர், கூஅச.

**கருமை** - வலிமை, 'கருங்கை யொள் வாட் பெரும்பெயர் வழுதி' [illegible]; 'கரு ங்கைக் கொல்லன்' உக.

**கருவி** - தொகுதி, 'கருவி வானம்'

**கருவூர்** - இது சேரர்களுடைய இராச தானிகளுளொன்று; இது வஞ்சியெ னவும் வழங்கும், கக, ககூ, கூஉ, கூசு, எஅ, கசுஅ, உகக.

**கலக்குற்றன்று** - கலக்கமுற்றது, 'பெ ருங்கலக் குற்றன்றால்' சக.

**கலப்பை** - மூட்டுக்கள்; யாழுமாம், 'காவினெங் கலனே சுருக்கினெங் கலப்பை' உOசு.

**கலம்** - ஆபரணம், 'செய்வுறு நன்கலம்' சு; குப்பி, 'யவனர் நன்கலந் தந்த தண்கமழ் தேறல்' ருசு.

**கலவம்** - மயிற்பீலி, 'கலவ மஞ்ஞை யிற் காண்வர வியலி' ககூகூ.

**கலாம்** - போர், 'புலாற்கள ஞ் செய்த கலாஅத் தானையன்' சுகூ.

**கலாவ** - கலக்க, 'தண்சிதர் கலாவப் பெய்யினும்' கOரு.

**கலி** - ஓசை, 'கலிகெழு கடவுள்' ருஉ; செருக்கு, 'வெள்ளுளைக் கலிமான்' கரு, 'கலிமான் வளவ' கூக; 'கதழ் பரிய கலிமாவும்' ருரு; தழைத்தல், 'கலிகொள் யாணா வெண்ணிப் பற ந்தலை' சுசு.

**கலிச்சும்மை** - மிக்க ஆரவாரம், 'கலிச் சும்மை வியலாங்கண' உஉ.

**கலித்த** - செருக்கிய, 'கராஅங் கலித்த' கூஎ; தழைத்த, 'தூவற் கலித்த தேம் பாய் புன்னை' உச, மிக்க, 'மானி னங் கலித்த மலை' கூஅ.

**கலுழ்ந்து** - கலங்கி, 'உண்கண் கலுழ்ந் துவா ரரிப்பனி' கசச.

**கவ்வை** - எள்ளிளங்காய், 'கவ்வை கறு ப்ப' கஉO.

**கவசம்** - மெய்புகு கருவி, 'புலிநிறக் கவ சம்' ககூ.

**கவர்பு** - கவர்த்து, 'அந்தண் காவிரி வந் துகவர் பூட்ட' கூரு; கவர்ந்து, 'விளை வயல கவர்பூட்டி' கசு.

**கவலை** - கவர்ததவழி, 'துன்னருங் [illegible] லை' கூ.

**கவான்** - மலைப்பக்கம், 'விறல்வரைக் கவான்' கருக.

**கவிகண்ணோக்கு** - கையாற்கவிக்கப்ப ப்பார்க்கும்பா ர்வை, 'கவிகண் ணோக்கின் ஆடவர்' கூ.

**கவிகுளம்பு** - கவிந்தகுளம்பு, 'வெள்ளு ளைக்கலிமான் கவிகுளம் புகள' கரு.

**கவிகை** - இடக்கவிந்தகை, 'கவிகை வண்மைக் கடுமான் கோதை' ருச.

**கவினிய** - அழகுபெற்ற, 'ஆசினி கவி னிய பலவின்' கருஅ.

**கவினை** - ஒளியையுடையாய், 'செஞ்ஞா யிற்றுக் கவினை' ச.

கவுள் - கன்னம், 'களிறுகவு ளடுத்த வெறிகல்' ருo.
கவைஇய-அகத்திட்ட, 'ஆரங் கவைஇய மார்பே' கக.
கவைமுள் - வேலமுள், 'கவைமுள்ளிற் புழையடைப்பவும்' ருஅ.
கழங்கு - கழற்சிக்காய், 'மகளிர் - பொலஞ்செய் கழங்கிற் றெற்றி யாடும்' ருகூ.
கழல் - ஒருகொடி, 'கழற்கனிவகுத்த' ருஎ; வீரகண்டை, 'தாள் - களங்கொளக் கழல்பறைந்தன' ச.
கழனி - வயல், 'கழனி யுழவர்' கரு.
கழாத்தலை - கழாத்தலையாரென்னும் சங்கப்புலவர்; 'நும்போ லறிவி னுமருளொருவன், புகழ்ந்த செய்யுட் கழாஅத் தலையை, யிகழ்ந்ததன் பயனே' உoஉ.
கழால் - கழுவுதல், 'ஊர்க்குறு மாக்கள் வெண்கோடு கழாலின்' ருச; களைதல், 'களைகால் கழாலின்' கஉo.
கழி - காம்பு, 'தோல் கழியொடு பிடிசெறிப்பவும்' ருஅ.
கழிப்பி - முடித்து, 'மூவேழ்துறையு முறையுளி கழிப்பி' கருஉ.
கழிய - இறப்ப, 'மாணிழை மகளிர் நாணினர் கழிய' எஅ.
கழியும் - இறக்கும், 'ஆடுநர் கழியுமிவ் வுலகத்து' உக.
கழுமிய - கலந்த, 'ஆத்தாக் கழுமிய துகளன்' உருஅ.
கழுவாய் - போக்கும்வழி, 'வழுவாய் மருங்கிற் கழுவாயு முளவென' ருச.
கழூஉ - கழுவி, 'கழூஉவிளங் காரம்' கரு.
களம் - போர்க்களம், 'ஈரைம் பதின்மரும் பொருதுகளத் தொழிய' உ; யாகசாலை, 'யூப நட்ட வியன்களம் பலகொல்' கரு.
களரி - களர்நிலம், 'கள்ளி போகிய களரியம் பறந்தலை' உஉரு.
களிறு - ஆண்பன்றி, 'களிறுமேல் கொள்ளவும்' சக; யானை, 'கொல்களிற்று மீமிசைக் கொடிவிசும்பு நிழற்றும்' கூ.
கறங்க - ஒலிப்ப, 'சிலைத்தார் முரசங் கறங்க' ருகூ.
கறி - மிளகுகொடி, 'கறிவள ரடுக்கத்து' ககூஅ.
கறிக்கும் - தின்னும், 'மடப்பிணை...... வேலை வெண்பூக் கறிக்கும்' உரு.
கறுழ் - குதிரைமுகக்கருவி, 'மாவே,... கறுழ்பொருத செவ்வாயான்' ச.
கறை - கறட்பு, 'கறைமிட றணியலு மணிந்தன் று' க.
கறையடி யானை - கறைபொருந்திய அடியினையுடைய யானை, ருஅ, கருரு.
கன்மார் - கற்பார், 'இளம்பல கோசர் விளங்குபடை கன்மார்' ககூக.
கனலி - சூரியன், 'அலங்குகதிர்க் கனலி நால்வயிற் றோன்றினும்' ருரு; 'வெங்கதிர்க் கனலி துறறுவும்' சக.
கனை - மிகுதி, 'கனையெரி யுரறிய மருங்கும்' உரு.

## கா.

கா - சோலை, 'கடிமரந் தளங்கிய காவும்' உரு; தோட்சுமை, கoரு.
காங்கு - காணபேன், 'காணகு வந்திசிற் பெரும' கஎ; 'எந்தைசிற் காண்குவந் திசினே' கஉரு.
காண்பு - காட்சி, 'கார்ப்பெய றலைஇய காண்பின காலை' கககூ.
காப்பினை - காவலையுடையை, 'விதுப்புற வறியா வேமக் காப்பினை' உo.
காப்பு - காவல், 'காப்புடைய வெழு முருக்கி' கச.
காமர் - அழகு, 'காமர் - வண்ண மார்பு' க.
காய்தல் - விடாய்த்தல், 'காய்தலு முண்டக் கள்வெய் யோனே' உருஅ.
காய - காவிய = சுமந்த, 'சுவலழுந்தப் பலகாய' ககூகூ.
காயம் - ஆகாயம், 'வறிதுநிலைஇய காயமும்' உo, ருo.
கார் - கார்காலம், 'கண்ணி கார்நறுங் கொன்றை' க.
காரியாறு - ஓராறு, சஎ.
காரெனுக்கல் - புல்லென்றசுற்றம் 'காரெ னொக்கற் கடும்பசி யிரவல' கசக.
காளை - ஒருசெடி, 'முட்காற் காரை முதுபழன்' உருஅ.
காலம் - முடிவு, 'ஞாலங் காக்குங் கால முன்பின்' ருசு.
காலமுன்ப - காலன்போலும் வலியையுடையோய், 'கால முன்பசிற் கண்டனென்' உரு.

காவல் - காக்கப்படுந்தேயம்; ஆகுபெயர், 'காவல் - குழவி கொள்பவரி னோம்புமதி' ரு.

காவலர் - காக்கும் அரசர், 'வையங் காவலர்' அ.

காவிரி - ஒருநதி, 'அந்தண் காவிரி வந் திகவர் பூட்ட' கூரு; 'மிக்குவரு மின் னீர்க் காவிரி' சாகூ; 'நீயே தண்பு னற் காவிரிக் கிழவனை' ருஅ; 'புனி றுநீர் குழவிக் கிலிற்றுமுலை போலச், சுரந்த காவிரி மரங்கொன் மலிநீர்' சுஅ; 'பொன்படு நெடுவரைப் புய லேறு சிலைப்பிற், பூவிரி புதுநீர்க் [illegible] விரி புரக்குந், தண்புனற் படப்பை' கசாசு; 'கரைபொருது, இரங்குபுன னெரிதரு மிகுபெருங் காவிரி, மல்ல னன்னாட்டு' களச; 'கோடை யாயி னுங் கோடி .....காவிரி புரக்கு நன் னாடு' கூகூகூ; 'மூழ்ங்குநீர்ப் படப் பைக் காவிரிக் கிழவன்' கூகூகூ.

காவிரிப்பூம்பட்டினம் - சோழநாட்டில் கடற்கரைக்கண் இருந்ததோர் பழை யநகரம், ருஎ, ருஅ, கஎக, கூருகூ.

காழ் - கம்பம், 'வெளிறி னோன்காழ்ப் பணைநிலை முனைஇ' உகூ; காமபு, 'கணைடார னோன்காழ் திருத்தி' கூரு; நாராசம், 'கயத்துவாழ் யாமை காழ் கோத் தன்ன' எ௦; முத்துவடம, 'மார்பிற் பூண்ட வயங்குகா ழாரம்' கரு௦; விதை, 'அணில்வரிக் கொடு ங்காய் வாள்போழ்க் திட்ட - காழ்' உசசு.

காழகம் - ஆடை, 'காழக நீப்பவும்' சக.

கான் - காடு, 'கானக நாடனை' ரு.

கானப்பேர் - கானையார்கோயில்; இது பல சிற்றரண்களையுடையதோர் பேரரண்; இதன்தலைவன் வேங்கைமார்பன்; இவனைவென்று இதனைக்கைக் கொண்டான் உக்கிரப் பெருவழுதி, 'அருங்குறும் புடுத்த கானப் பேரெயில், ......... வேங்கை மார்ப னிரங்க' உக; கூசுஎ.

கானல் - கடற்கரை, 'நிலவுமணல் வியன்கானல்' கஎ; 'கானற் கழியுப்பு முகந்து' சு௦.

## கி.

கிடப்பி - கிடத்தி, 'பசும்புற் பரப்பினர் கிடப்பி' கூகூ.

- கெட்டி, 'அறுகய மருங்கிற் சிறுகோல் வெண்கிடை' எரு.

கிண்கிணி - சதங்கை, 'கிண்கிணி களைந்தகா லொண்கழ றொட்டு' எஎ.

கிணை - உடுக்கை, 'நுண்கோற் றகைத்த தெண்கண் மாக்கிணை' எ௦; போர்ப்பறை, 'பாடின் றெண்கிணை கறங்க' எசு; 'தெண்கிணை கறங்கச்சென் றாண்டட் டனனே' எஅ.

கிணைமகள் - விறலி, 'கிணைமகட் கெளிதாற் பாடினள் வரினே' கககக.

-மகன் - கிணையென்னும்பறையை யுடையவன், 'இரும்பறைக் கிணைம [illegible] கூஅஅ.

-ன் - கிணைமகன், 'கொன்வரல் [illegible] கூஎக.

-வான் - உரித்தாந்தன்மையையுடையோன், 'விழுநீர் வேலி நாடுகிழவோனே' கூ.

கிழித்த - கின்ற, 'குறுமுயற் கொழுஞ் சூடு கிழித்த வொக்கலொடு' கூச.

கிள்ளி - ஏனாதி திருக்கிள்ளி, 'கழல் புனை திருந்தடிக் கடுமான் கிள்ளி' கசுஎ. சோழன்.

கிள்ளிவளவன் - சோழன் குளமுற்றத் துத்துஞ்சிய கிள்ளிவளவன், 'உருகெழு பசும்பூட் கிள்ளி வளவன்' சுக; 'கிள்ளி வளவ னல்லிசை யுள்ளி' எ௦.

கிளை - இனம், 'கிளைபுகலத் தலைக்கூடியாங்கு' கஎ.

கிளைப்பின் - கிளறின், 'கேழ லுழுத வி ருஞ்சேறு கிளைப்பின்' களசு.

கிளையை - கிளைமையை யுடையோய், 'கிளைய மன்னெங் கேள்வெய் யோற்கென' கசச.

## கீ.

கீழ்மடை - கடைமடை, 'அரிநர் கீழ் மடைக் கொண்ட வாளையும்' சஉ.

கீளவது - உடைவது, 'சிறுகுளங் கீள்வது மாதோ' ககஅ.

## கு.

குச்சு - குச்சுப்புல், 'குச்சி னிரைத்த குரூஉமயிர் மோவாய்' உருஎ.

குட்டம் - ஆழம், 'இருமுந்நீர்க் குட்டமும்' உ௦; 'கெடுநீர்க் குட்டத்துத் துடுமெனப் பாய்ந்து' உசகூ.

குட்டுவன் - சோழியவேனாதி திருக்குட்டுவன், 'வலிதுஞ்சு தடக்கை வாய் வாட் குட்டுவன்' ௩௪௩.

குடக்கு - மேற்கு, 'வெண்டலைப் புணரிக் குடகடல்' ௨; 'குடாஅது தொன்றுமுதிர் பௌவத்துக் குடக்கும்' ௬.

குடமலை - மேற்றிசையின்கண்ணதோர் மலை, 'குடாஅது பொன்படு நெடுவரை' ௧௬௬.

குடர் - நரம்பு, 'அரிக்குட ரரியின் யாமை மிளிர' ௨௪௧.

குடவாயில் - ஓரூர், ௭௪, ௨௪௨.

குடவர் - குடநாட்டார், 'வரையா வீகைக் குடவர் கோவே' ௧௭.

குடாது - மேற்கின்கண்ணது, 'குடாஅது தொன்றுமுதிர் பௌவத்தின் குடக்கும்' ௬.

குடிஞை - பேராந்தை, 'கடுந்துடி குடிஞையோ டிரட்டும்' ௧௭௦.

குடுமி - பாண்டியன் பல்யாகசாலைமுது குடுமிப்பெருவழுதி, 'குடுமிக் கோமாற் கண்டு நெடுநீர்ப் புற்கை நீத்தனம் வரற்கே' ௬௪.

குடுமித்து - முடிபையுடைத்து, 'கொண்ட குடுமித்துத் தண்பணை நாடே' ௩௨.

குடை - பனையோலையாற்செய்யப்படும் ஒருவகை உண்கலம், 'இரும்பனங் குடையின் மிசையும்' ௧௭௭.

குண்டு - ஆழம், 'குண்டகழி' ௧௪; 'குண்டுசுனை' ௧௧௬.

குணக்கு - கிழக்கு.

குணாது - கிழக்கின்கண்ணது, 'குணாது கரைபொரு தொடுகடற் குணக்கும்' ௬.

குணில் - முரசடிக்கும் குறுந்தடி, 'குணில்பாய் முரசி னிரங்கு மருவி' ௧௪௩.

குதிரை - ஒருமலை, 'ஊரா தேந்திய குதிரைக் கூர்வேற், கூவிளங் கண்ணிக் கொடும்பூ ணெழினியும்' ௧௫௮; 'ஊராக் குதிரைக் கிழவ' ௧௬௮.

குப்பை - திரட்சி, 'குப்பை நெல்லின் முத்தூறு தந்த' ௨௪.

குமணன் - ஒருகொடையாளி, 'குன்றியுங் கொள்வல் கூர்வேற் குமண' ௧௫௯; 'கட்டோர் கட்ட நல்லிசைக் குமணன்' ௧௬௦; 'திருந்துவேற் குமணன்' ௧௬௩; 'திற்படர்ந் திசினே நற்போர்க் குமண' ௧௬௪.

குமரி - கன்னியாறு, 'தெனாஅ துருகெழு குமரி' ௬; 'தென்குமரி' ௧௭; 'குமரியம் பெருந்துறை யயிரை மாந்தி' ௬௭.

குய் - தாளிப்பு, 'கமழ்குய் யடிசில்' ௧௦; 'சுவைக்கினி தாகிய குய்யுடையடிசில்' ௧௨௭.

குரம்பை - சிறியமனை, 'குறியிறைக் [illegible]ரம்பை' ௧௨௯.

குரல் - எழுநரம்பில் முதற்றானம், 'குரல்புணர்சீர்க் கொளைவலபாண் [illegible]னும்' ௧௧; கதிர், 'மானணி பெருங்குர லனையன்' ௧௩௮; தோகை, 'பருஉக்குரற் சிறுதினை' ௧௬௮.

குரவை - குரவைக்கூத்து, 'சினமாந்தர் வெறிக்குரவை - யோத நீரிற் பெயர்பு பொங்க' ௨௨.

குரிசில் - தலைவன், 'பரிசிலர்க் கருங்கல நல்கவுங் குரிசில்' ௧௪.

குரீஇ - குருவி, 'குன்றத் திறுத்த குரீஇயினம்' ௧௯; 'தூக்கணங் குரீஇத் தூங்குகூடேய்ப்ப' ௨௨௫.

குரும்பை - பனைநுங்கு, 'இரும்பனையின் குரும்பைநீரும்' ௨௪.

குரூஉ - கனம், 'பசுமட் குரூஉத்திரள் போல' ௩௨.

குலவு - வளைவு, 'குலவுச்சினைப் பூக்கொய்து' ௧௧.

குவவு - திரட்சி, 'ஒங்குமணற் குவவுத் தாழை' ௨௪.

குவளை - செங்கழுநீர், 'நீர்தரு மகளிர் குற்ற குவளையும்' ௪௨; 'குண்டுசுனைப் பூத்த குவளை' ௧௧௬. நீலம், 'தடவுவாய்க் கலித்த மாயிதழ்க் குவளை' ௧௦௫.

குவை - குவிவு, 'குவையிருங் கூந்தல்' ௨௫.

குவைஇய - திரண்ட, 'கூர்வேற் குவைஇய மொய்ம்பின்' ௧௧௮.

குழவி - குழந்தை, 'தாயி றூவாக் குழவி போல' ௪.

குழவிகொள்பவர் - குழந்தையை வளர்ப்போர், 'குழவி கொள்பவரி னோம்புமதி' ௫.

குழிசி - பானை, 'இருங்கட் குழிசி கவிழ்க்கிழுது மறப்ப' ௬௫.

குழீஇ - திரண்டு, 'கொண்மூ வேண்டு வயிற் குழீஇ' ௧௬௧.

குழை - தளிர், 'பொலங்குழை யுழிஞை' ।

குழைப்ப - தளிர்ப்ப, ‘முளிபுற் கானங் குழைப்ப’ கசுO.
குளவி - மலைமல்லிகை, ‘அடைமல்கு குளவி’ கூO; ‘கூதளங் கவினிய குளவி மூன்றில்’ கசுஅ.
குளிப்ப - மேல்விழுந்து உள்புக, ‘கடற்படை குளிப்ப மண்டி’ கூ.
குற்ற - பறித்த, ‘குற்ற குவளை’ சஉ.
குற்றுதல் - குறுதல், ‘குற்றுறு வுலக்கை’ உஉ.
குறித்து - கருதி, ‘நீரழுவ நிவப்புக் குறித்து’ கச.
குறியெதிர்ப்பை - குறித்த எதிர்ப்பை, ‘நெடுங்குறி யெதிர்ப்பை நலகி’ கசுரூ.
குறுகி - அணுகி, ‘இடையின்று குறுகி’ ருச.
குறுங்கோழியூர் - ஓரூர், கஎ, உO, உஉ.
குறுநணி - அணிமை, ‘நம்முட் - குறுநணி காண்குவ தாக’ உOக.
குறும்பறை - பேடை, ‘உயர்நிலை மாடத்துக் குறும்பறை யசைஇ’ கூஎ.
குறும்பு - அரண், ‘குறும்பல் குறும்பிற் றதும்பவைகி’ கஎஎ; குறும்பர், ‘குறும்படைந்த வரண்கடந்தவர்’ கூஎ. சிற்றரண், ‘குரூஉக்களிற்றுக் குறும்புடைத்தலின்’ கூஎ.
குறுமகள் - மனைவி, ‘மெல்லியற் குறுமக ளுள்ளிச் செல்வல்’ ககூசு.
குறுமாக்கள் - சிறுபிள்ளைகள், ‘ஊர்க்குறு மாக்கள் வெண்கோடு கழாலின்’ கூச.
குறை - முடிக்கப்படும்பொருள், ‘பயக்குறை யில்லைத்தாம் வாழு நாளே’ கஅஅ.
குன்றினும் - குறையினும், ‘மாரிபொய்ப்பினும் வாரி குன்றினும்’ கூரு.
குன்று - சிறுமலை, ‘குன்றுமலை காடுநாடு’ கஎ; ‘குன்றுறு வெறியு மரவம் போல’ உகக; பக்கமலை, ‘அம்மலை காக்கு மணிநெடுங் குன்றின்’ கருO.
குன்றூர் - ஓரூர், கூகூஅ.

கூ.

கூஉம் - கூப்பிடும், ‘ஓவாது கூஉநின் னுடற்றியோர் நாடே’ ச; கூவும், ‘சேவல்......எனல் காப்போ ருணர்த்திய கூஉம்’ உஅ.
[redacted] - கோட்டான், ‘வாய்வன் காக்கையுங் கூகையுங் கூடி’ உகூஅ.
கூடல் - மதுரை, ‘தமிழ்கெழு கூடற் றண்கோல் வேந்தே’ ருஅ.
கூடலூர் - ஓரூர், உஉக.
கூடு - நெற்கூடு, ‘கூடு வியனகர்’ கசஅ.
கூதளம் - கூதாளி, ‘கூதளங் கவினிய குளவி மூன்றில்’ கசுஅ.
கூம்பு - பாய்மரம், ‘கூம்பொடு மீசைப் பாய் களையாது’ கூO.
கூர் - மிகுதி, ‘கூரி லாண்மை’ எரு.
கூழ் - சோறு, ‘கொளக்கொளக் குறைபடாக் கூழுடை வியனகர்’ எO; பொரு கஉஉ.
கூழை - பின்படை, ‘கூழைதார் கொண்டு’ அஅ; மயிர், ‘கொண்டைக் கூழைத் தண்டழைக் கடைசியர்’ சுக.
கூளியர் - ஆறலைகள்வர், ‘குரங்கன்ன புன் குறுங்கூளியர்’ ககூசு; மறவர், ‘கூர்நல் லம்பிற் கொடுவிற் கூளியர்’ உகூ.
கூற்றம் - நாட்டின் ஒருபாகம், உச; யமன், ‘மருந்தில்கூற்றத்து’ கூ.
கூற்று - யமன், ‘உயிருண்ணுங் கூற்றுப் போன்றன’ ச.

கெ.

கெடிறு - ஒருவகைமீன், ‘குரூஉக் கெடிற்ற குண்டகழி’ கஅ.
கெடுவின்று - கெடுதலில்லாமல், ‘கெடுவின்று.........அறநின்று நிலையிற்று’ கூக.

கேட்டிசின் - கேட்டேன், ‘பிறர்பிறர் கூற வழிக்கேட் டிசினே’ கருய.
கேட்பல் - கேட்பேன், ‘கேட்ப லெந்தே’ உஎ.
கேழ் - நிறம், ‘சேற்றுவளர் தாமரை பயந்த வொண்கேழ் - நூற்றிதழ லரின்’ உஎ.
கேளலம் - கேட்டறியோம், ‘இன்றினுங்கோ கேளலம்’ எசு.
கேளிர் - சுற்றத்தார், ‘வன்புலக் கேளிர்க்கு வருவிருந் தமரும்’ சஉ.
[redacted] - கோடாவியின்கை, ‘நெடுங்கை நவியம்’ கூசு; செயல், ‘மையன் மாலையாங் கையறு பினைய’ சுஎ.
கைம்மூற்றல-முடியா, ‘கைம்மூற் றலநின் புகழே’ ருகூ.
கைம்மை - கைம்மைநோன்பு, ‘ஒண்ணுதன் மகளிர் கைம்மை கூர’ உரு.

கையறவு - மிடிமை, 'பிறர்கை யறவு தானு ணூதலும்' கருஎ.

கைவழி - யாழ், எப்பொழுதும் கையகத்திருத்தலால் இப்பெயர்பெற்றது; 'கைவழி மருங்கிற் செவ்வழி பண்ணி' கசுக.

## கொ.

கொட்கும் - சூழவரும், 'காலுணவாகச் சுடரொடு கொட்கும்' சுங.

கொடி - ஒழுங்கு, 'ஆய் கரும்பின் கொடிக்கூரை' உஉ; 'மீன்சுடு புகையின் புலவுநாறு நெடுங்கொடி' ருஉ; துவசம், 'கொல்களிற்று மீமிசைக் கொடிவிசும்பு நிழற்றும்' கூ?

கொடிஞ்சி - தேர்மொட்டு, 'நெடுந்தேர்க் கொடிஞ்சி பொலிய நின்றோன்' எஎ.

கொடிது - தீத்தொழில், 'கொடிது கடிந்து கோறிருத்தி' கஎ.

கொடுத்தோய் - வழங்கினோய், 'பெருஞ்சோற்று மிகுபதம் வரையாது கொடுத்தோய்' உ.

கொடுமை - வளைவு, 'கொடுவிற் கூளியர்' உங;
ணீர்ச் சிறுகுளம்' ககஅ.

கொடுவரி - புலி, பண்புத்தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை; ஆகுபெயருமாம், 'கொடுவரி வழங்குங் கோடியர் நெடுவரை' கஙரு.

கொண்கானம் - ஒருமலை, கருச, கருரு, கருசு.

கொண்டல் - கீழ்காற்று, 'கொண்டன் மாமழை' ஙச.

கொண்டி - கொள்ளை, 'கொண்டியும் பெரிதென' எஅ; 'தண்டமிழ் வரைப்பகங் கொண்டி யாக' ககஅ; திறை, 'கொண்டி வேண்டுவ னாயிற் கொள்கென' ருக.

கொண்பெருங் கானத்துக்
கொண்கானங்கிழான், கருசு.

கொண்பெருங்கானம் - கொண்கானமென்னுமலை, 'தண்பல விழிதரு மருவிக், கொண்பெருங் கானம் பாடலெனக் கெளிதே' கருச; 'விளங்குபுகழ்க் கொண்பெருங் கானத்துக் கிழவன்' கருரு; 'இரண்டுடன் குடைத்தே கொண்பெருங் கானம்' கருசு.

கொண்மார் - கொள்ளல்வேண்டி, 'ஒன்படைக் கடுந்தார் முன்புதலைக் கொண்மார்' கரு.

கொண்மென - கொண்மினெனச்சொல்லி, 'கொண்மெனச் சாத்திருடகல்கி யோனே' கருஉ.

கொய்து - பறித்து, 'குலவுச்சினைப் பூக் கொய்து' கக.

கொல்லாது - கெடுக்காமல், 'பிறரெனக் குணங்கொல்லாது' ருரு.

கொல்லி - ஒருமலை, 'ஓங்கு கொல்லியோ ரடுபொருந' உஉ; 'ஓங்கிருங் கொல்லிப் பொருநன்' கருஉ; 'பிறங்குமிசைக் கொல்லி யாண்ட வல்வில்லோரியும்' கருஅ.

கொலைவன் - கொல்லுதலைச்செய்பவன், 'கொலைவன் யார்கொலோ' கருஉ.

கொழுநன் - தலைவன்.

கொழுமீன் - கொழுவியமீன், 'கழனியுழவர் சூட்டொடு தொகுக்குங் - கொழுமீன்' கங.

கொள்கை - விரதம், 'ஆன்ற கேள்வி யடங்கிய கொள்கை' உசு.

கொள்ளார் - பகைவர், 'கொள்ளாரோட்டிய நல்லியும்' கருஅ.

கொளீஇ - கொளுத்தி, 'பூநாற்றத்த புகைகொளீஇ' கச; ஓங்குமலைப் பெருவிற் பாம்பு ஞாண் கொளீஇ' ருரு; பெய்து, 'புனற்குருதி யுலைக் கொளீஇ' உசு.

கொளை - பாட்டு, 'கொளைவல்பாண் மகளும்' கக.

கொற்றம் - வெற்றி, 'பாடுதுறை முற்றிய கொற்ற வேந்தே' உக.

கொற்றன் - பிட்டங்கொற்றன், 'வைவன் ளீகைக் கடுமான் கொற்ற' கசுஅ; 'திருந்துவேற் கொற்றன்' கஎக.

கொன்றோர் - சிதைத்தோர், 'ஒருவன் செய்தி கொன்றோர்க்கு'

## கோ.

கோ - அரசன், 'ஆற்றலெங்கோ' உஉ.

கோடாது - வளையாமல், 'நமரெனக் கோல்கோடாது' ருரு.

கோடியர் - கூத்தர், 'விழவிற் கோடியர் நீர்மை போல' உக.

கோடு - கொம்பு, 'நுதிமழுங்கிய வெண்கோட்டான்' ச. சிகரம், 'பொற்கோட் டிமயமும்' உ. பக்கம், 'கோ

மதிரள் கொண்மூ' ௩௫. புடை, 'கோடிய ரடைப்பு' ௧௬௪. யாழின் ஒருறுப்பு, 'கருங்கோட்டுச் சீறியாழ்' ௧௨௭; ௧௪௫.

கோடை - கடிய நெடுவேட்டுவன்மலை, 'வெள்வீ வேலிக் கோடைப் பொருந' ௨௦௫.

கோதை - சேரமான் கோக்கோதை மார்பன், 'கோதை மார்பிற் கோதையானும்' ௪௮; 'யாங்கன மொழிகோ வோங்குவாட் கோதையை' ௪௯. சேரன், 'மாவள் வீகைக் கோதையும்' ௭௨. மாலை, 'கோதை மார்பிற் கோதை யானும்' ௪௮.

கோயில் - அரண்மனை, ௩௬.

கோல் - கோற்றொழில், 'வார்கோல் ......குறுந்தொடி மகளிர்' ௩௬.

கோவல் - கோவலூர்.

கோவலூர் - இது பெண்ணையாற்றின் கரையின் கண்ணதோர் நகரம்; இதன் தலைவர் மலையமான் திருமுக்காரி முதலியோர்; இஃது ஒரு காலத்து அதியமான் நெடுமானஞ்சியால் வெல்லப்பட்டது; கோவலெனவும் வழங்கும், 'மூரண்மிகு கோவலூர் நூறி நின், அரணடு திகிரி யேந்திய தோளே' ௧௧.

கோவூர் - ஓரூர், ௩௧.

கோழி - உறையூர், 'கோழி - யுயர்நிலை மாடத்து' ௮௭; கோழி யோனே கோப்பெருஞ் சோழன்' ௨௧௨.

கோள் - குலை, 'செழுங்கோள் வாழை' ௧௬௮.

கோளி - பூவாது காய்க்கு மரம், 'முழுமுத லொலைந்த கோளி யாலத்து' ௫௮.

கோனாடு - இது சோழநாட்டின் உள்நாடுகளுளொன்று, ௫௪.

## கௌ.

கௌரியர்-பாண்டியர், 'தவிரா வீகைக் கௌரியர் மருக' ௩.

## சா.

சாஅய் - மெலிந்து, 'நல்கா மையி லைவரச் சாஅய்' ௧௪௬.

சாகாடு - உருள், 'அச்சுடைச் சாகாட் டாரம்' ௨௫௬. சகடம்=வண்டி, 'ஆரைச் சாகாட் டாழ்ச்சி போக்கும்' ௯௦; 'பண்டச் சாகாட் டாழ்ச்சி சொலிய' ௯௦; 'காவற் சாகா டுகைப்போன்' ௧௮௫; 'அச்சுடைச் சாகாட் டாரம் பொருந்திய - சிறுவெண் பல்லி' ௨௫௬.

சாத்தன் - ஒல்லையூர்கிழார்மகன் பெருஞ்சாத்தன், 'வல்வேற் சாத்தன் மாய்ந்த முல்லையும் பூத்தியோவவ்வூர் நாட்டே' ௨௪௨; பாண்டியன் கீரஞ்சாத்தன், 'உண்மென விரக்கும் பெரும்பெயர்ச் சாத்தன்' ௧௭௮.

சாந்து - சந்தனம், 'பொலங்கீழ்ற்காற் புலர்சாந்தின்' ௩.

சாபம் - வில், 'சாப நோன்ஞாண்' ௧௪; 'குறுந்தொடி கழித்தகைச் சாபம் பற்றி' ௭௦.

சாயலர் - இளைப்பையுடையர், 'உழையோர் தன்னினும் பெருஞ்சாயலரே' ௱௨.

சாயா - இளையாத, 'மருந்தில் கூற்றத் தருந்தொழில் சாயா' ௩.

சாயின்று - சாய்ந்தது, 'சாயின் றென்ப வாஅய் கோயில' ௧௨௭.

சார்வு - புகலிடம், 'உறுநர் செல்சார் வாகி' ௨௦௫.

சாறு - விழா, 'சாறுகொண்ட களம் போல' ௨௨; 'சாறுதலைக் கொண்டென' ௮௨.

சான்ற - அமைந்த, 'பாடல் சான்ற விறல்வேந்தனும்' ௧௧.

சான்றோர்-நற்குணங்களாலமைந்தோர், 'சான்றோர் செய்த நன்றுண் டாயின்' ௩௪.

## சி.

சிதடன் - குருடன், 'துஞ்சுபுலி யிடறிய சிதடன் போல' ௭௩.

சிதடு - குருடு; இஃது எண்வகையெச்சத்துள் ஒன்று, 'சிறப்பில் சிதடு முறுப்பில் பிண்டமும்' ௨௮.

சிதர் - துளி, 'தண்சிதர் கலாவப் பெய்யினும்' ௧௦௫.

சிதலை - கறையான், 'நுண்பல் சிதலை யரிதுமுயன் றெடுத்த - செம்புற்று'

சிதார் - சீரை, 'வேற்றிழை நுழைந்த வேர்நனை சிதாஅர்' ௬௧; கூருகிர்ப் பருந்தி னிருஞ்சிற கன்ன - பாறிய சிதாரேன்' ௧௫௦.

சிதைய - அற, 'புலிநிறக் கவசம் பூம் பொறி சிதைய' ருக; சிதற, 'தண்ணுன் பொருனை வெண்மணற் சிதைய' ருரு.

சிமை - மலையுச்சி, 'ஆடுகழை நரலுஞ் சேட்சிமை' கஉ0.

சிலம்பு - மலை, 'குணில்பாய் முரசி னிரங்கு மருவி-நளியிருஞ் சிலம்பு' கசரு.

சிலை - வில, 'சிலைத்தா ரகலம்' ருக.

சிலைக்கும் - கொட்டும், 'வலிதுரந்து சிலைக்கும் வன்கட் கடுந்துடி' கஎ0.

சிலைத்து - ஒலித்து, 'சிலைத்தெழுந்து' எஅ.

சிவந்து - கோபித்து, 'கதவெறியாச் சிவந்தராஅய்' ச.

சிற்றளாயம் - அளாயமென்னும் நகரத்தின் ஒருபாகம், உ0உ.

சிறந்த - மிகுந்த, 'சிறந்த சீர்கெழுகொடியும்' க; 'சிறந்த - நான்மறை முனிவர்' ரு.

சிறந்தன்று - கனத்தது, 'சிறியோன் பெறினது சிறந்தன்று மன்னே' எரு.

சிறப்பு - செல்வம், 'தகைப்பெருஞ் சிறப்பிற் குடிமிக் கோமான்' ருச; தலைமை, 'வீயாச் சிறப்பின் வேள்வி முற்றி' கரு; 'உரைசால் சிறப்பிற் புகழ்சான் மாற' ருஎ; 'உலகமொடு நிலைஇய பலர்புகழ் சிறப்பின்' எஉ.

சிறுகுடி - பண்ணனூர், 'கைவள் ளீகைப் பண்ணன் சிறுகுடி' எ0.

சிறுபதம் - தண்ணீர், 'கேளல் கேளிர் வேளாண் சிறுபதம்' எச.

சிறுபேராளர் - சிறியபெரிய ஆண்மையையுடையோர், 'நெடுமொழி மறந்த சிறுபே ராளர்' கஎஅ.

சிறை - அரண், 'நீர்மிகிற் சிறையு மில்லை' ருக; காவல், 'வீங்குசிறை வியலருப்பம்' கஎ; சிறகு, 'இருஞ்சிறை வலைவாய்ப் பருந்து' ரு.

சினவின் - கோபித்தெழுமாயின், 'இருளு முண்டோ ஞாயிறு சினவின்' க0.

சினை - மரக்கிளை, 'குலவுச்சினைப் பூக்கொய்து' கக.

சினைஇ - கோபித்து, 'அலங்குளைப் புரவி யைவரொடு சினைஇ' உ; 'மடங்கலிற் சினைஇ' எக.

சினைஇயோர் - சினப்பித்தோர், 'வளவ நிற் சினைஇயோர் நாடே' சக.

## சீ.

சீக்கும் - தாக்கும், 'மந்தி சீக்கு மணங்குடை முன்றில்' உசஎ.

சீர் - அளவு, 'விரிசீர்த் - தெரிகோல்' ரு. தலைமை, 'விழுச்சீர் - ஓடாப் [redacted] ட்கை' கஉரு; 'தண்குரவைச் சீர்தூக்குந்து' உச. தாளம், 'பறைச்சீர் தூங்க' ருஉ. நன்மை, 'சீருடைய விழைபெற் றிசினே' [redacted] பெருமை, 'சீர்கெழு கொடியு மவ்வே றென்ப'

சீர்த்தி - மிகுபுகழ், 'அருஞ்சீர்த்திப் பெருங்கணுறை' கரு.

சீரை - துலாம், 'சீரை புக்க [redacted] வீகை யுரவோன்' சரு.

## சு.

சுட்டின் - குறிப்பின், 'தொன்னிலக் கிழமை சுட்டின்' ருஉ.

சுடர் - ஒளி, 'தெறுசுடர் ஒண்கதிர் ஞாயிறு' ரு. சூரியன், 'சுடர் சுட்ட சுரத்தேறி' கருரு.

சும்மை - ஆரவாரம், 'கலிச்சும்மை வியலாங்கண்' உஉ.

சுரம் - அரியவழி, 'கொடிய வெண்ணுது சுரம்பல கடந்து' சஎ.

சுருக்கி - கட்டி, 'கல்யா றாகுளி பதலையொடு சுருக்கி' ருச.

சுருக்கினெம் - கட்டினேம், 'சுருக்கினெங் கலப்பை' உ0ரு.

சுவல் - தோள், 'சுவலழுந்தப் பலகாய' கருக; 'சுவற்பூண் ஞாண்மிசைப் பொலிய' கருரு. மேட்டுநிலம், 'வேங்கைச் செஞ்சுவல்' கஉ0.

சுவைக்க - உண்ண, 'சுவைக்கினி தாகிய குய்யுடை யடிசில்' கஉஎ.

சுற்றம் - கிளைகள், 'நகைப்புற னாகின் சுற்றம்' உரு.

சுறவு - ஒருமீன், 'சுறவினத் தன்ன வாளோர்' கரு.

## சூ.

சூட்டிய - கடாத்திய, 'தீரக விருக்கை யாழி சூட்டிய' கக. பரப்பிய, 'நிலவரை சூட்டிய நீணெடுந் தானை' உஉஅ.

- சூட்டிறைச்சி, 'குழுமூயற் கொழுஞ்சூடு' ருச. செற்கூடு, 'பீலி - கழனி யுழவர் சூட்டொடு தொகுக்கும்' கரு.

சூர் - சூரபன்மா, 'சூர்மலை முருகன்' [redacted]

சூர்ப்பு - வளைந்தகடகம், 'சுடாவிடு [redacted] ம்பூட் சூர்ப்பமை முன்கை' கடுரு.

சூல் - கருப்பம், இளம்பிடி யொருசூற் பத்தி னும்மோ' கரு௦.

சூழ்ச்சி - உசாவுதல், 'போற்றார்ப் பொறுத்தலுஞ் சூழ்ச்சிய தகலமும்' உ.

## செ.

செக்கர் - செந்நிறம், 'செல்சுடர் ஞாயிற்றுச் செக்கரிற் றோன்ற' கசு.

செங்கோலே - செங்கோலையுடையை, 'அறந்துஞ்சுஞ் செங்கோலையே' உ௦.

செத்து - அறிந்து, 'மூழுவின் - பாடின் மறண்கண் கனிசெத்து' கஉஅ.

செதுக்கண் - ஒளிமழுங்கினகண், 'புதுக்கண் மாக்கள் செதுக்க ணாா' உசுக.

செந்தில் - திருச்செந்தூர், 'வெண்டலைப் புணரி யலைக்குஞ் செந்தில், நெடுவேணிலைஇய காமர் வியன்றுறை'ருரு.

செம்பியன் - சோழன், தாளைச் செம்பியன் மருக' கூஎ.

செம்பியர் - சோழர், சிறப்பிற் செம்பியர் மருகன்' உஉஅ.

செம்மல் - தலைமை, 'தம்மைப் பிழைத்தோர்ப் பொறுக்குஞ் செம்மல்' சுரு; தும்மோ ரன்ன செம்மலு முடைத்தே' சஎ.

செம்மலே - தலைமையையுடையாய், 'எமக்கும் பிறர்க்குஞ் செம்மலே யாகலின்' கசுசு.

செம்மற்று-தலைமையையுடையது, 'செம்மற் றம்மவின் வெம்முனை யிருக்கை' கூரு.

செம்மீன் - அங்காரகன்; திருவாதிரையுமாம் ; 'செம்மீ னிமைக்கு [redacted] விசும்பின்' சு௦.

செம்மை - நேர்மை, 'செந்தொடை பிழையா வன்க ணாடவர்' கூ.

செய் - செய்கை, 'பெருஞ்செய் யாடவர்' ககக.

செய்தி - செய்கை, 'குடிப்பொருளன்றுநுஞ் செய்தி' சுரு. செய்ந்நன்றி, 'செய்தி கொன்றோர்க் குய்தி யில்லென' கூச. செய்வை, 'இனிய செய்திநின் னார்வலர் முகத்தே' கஉ.

செய்திமோ - செய்வாயாக, 'அறஞ்செய்திமோ வருள்வெய் யோய்' கசுரு.

செய்ம்மே - செய்வாயாக, 'வேட்டது செய்ம்மே' சஅ.

செயற்கை - தொழில், 'இயற்கை யல் [redacted] செயற்கையிற் றோன்றினும்' கூரு.

செயிர் - குற்றம், 'செயிர்தீர் கற்பிற் சேயிழை' கூ.

செயிர்த்தன்று - வெகுண்டது, 'செற்றன் றாயினுஞ் செயிர்த்தன் றாயினும்' உஉசு.

செரீஇ - செருகி, 'மிசையலங் குளைய பனைப்போழ் செரீஇ' உஉ.

செரு - சண்டை, 'செருமிகு சேஎய்' கச.

செருக்கிய - களித்த, 'கிணந்தின்று செருக்கிய நெருப்புத்தலை நெடுவேல்' உ௦௦.

செல்ல - பரக்க, 'உவைசெல முரசு வௌவி' உசு.

செல்லாமோ - போவேமல்லேமோ, 'செல்லா மோதில் சில்வளை விறலி' சுச.

செல்வக்கடுங்கோவாழியாதன் - சேரமான்சிக்கற்பள்ளித்துஞ்சிய செல்வக்கடுங்கோ வாழியாதன், 'செருமிகு நோன்றாட் செல்வக் கடுங்கோ, வாழியாத னென்னுந் தெவ்வர்' கூஅஎ.

செல்வை - செல்வமுடையாய், 'செல் [redacted] யாயிற் செல்வை யாகுவை' எ௦.

செலல் - செல்லுதல், 'வீங்குசெலன் மண்டிலம்' அ

செலவு - வீதி, 'செஞ்ஞா யிற்றுச் செலவும்' கூ௦.

செலியர் - தணிக, 'செலிய ரத்தைநின் வெகுளி' சு.

செலீயர் - போவதாக, 'படாஅச் செலீயர்நின் பகைவர் காளே' உச.

செவ்வழி - இரங்கற்பண், 'சீறியாழ் செவ்வழி பண்ணி' கசச, கசஎ. [redacted] லைப்பண், 'கைவழி மருங்கிற் செவ்வழி பண்ணி' கசக.

செவ்வானம் - செக்கர்வானம், 'செவ்வா னத்து வனப்புப் போன்றன' ச.

செவ்வியோர் - நடுவுநிலைமையையுடையோர், 'செவ்வியோர்க் களித்தலும்' உக.

செவிசெஞ்சேவல் - கழுகின் சேவல், 'கவிசெந் தாழிக் குவிபுறத் திருந்த செவிசெஞ் சேவலும்' உகூஅ.

செழியன் - பாண்டியன்; 'வென்வேற் செழிய' கக; 'சிதைதலுய்த் தன்றே

செற்றன்று - கறுவுகொண்டது, 'செற்றன் றாயினுஞ் செயிர்த்தன் றாயினும்' உஉ௬.

செற்றும் - சென்றுசெறியும், 'ஆழற் புற்றத் தடும்பிற் செற்றும்' க௫உ.

செறல் - வெகுட்சி, 'செறனோக்கின் ..... களிறு' க௫.

செறிவினை - அடக்கத்தையுடையாய், 'அறிவறி வாகாச் செறிவினை யாகி' ௬௦.

செறு - வயல், 'மலங்குமிளிர் செறுவில்' ௬௧; 'நூறுசெறு வாயினும்' க௮௪.

செறுக்கும் - அடைக்கும், 'மீனிற் செறுக்கும்' எ.

செறுத்த - அடக்கிய, 'செறுத்த செய்யுள்' ௫௬.

செறுவர் - பகைவர், 'செறுவர் நோக்கியகண்' க௦௦.

சென்மே - செல்வாயாக, 'தேர்வே [illegible] யைக் காணிய சென்மே' க௬௬.

சென்னி - சோழன், உ௦௬. தலை, 'இறைஞ்சுக பெருமநின் சென்னி சிறந்த, நான்மறை முனிவ ரேந்துகை யெதிரே' ௬.

## சே.

சேக்கும் - உறங்கும், 'கயலார் நாரை போரிற் சேக்கும்' உ௪; 'பொய்கை [illegible] போரிற் சேக்கும்' உ௦௧.

சேக்கை - கட்டில், 'நுரைமுகந் தன்ன மென்பூஞ் சேக்கை' ௫௦.

சேண் - நெடுந்தூரம், 'சேண்விளங் கும் புகழ்' க௦; 'சேண்விளங்கு சிறப்பின் ஞாயிறு' க௪௪. நெடுநாள், 'திரியாச் சுற்றமொடு முழுதுசேண் விளங்கி'உ.

சேட்சென்னி - சோழன் நலங்கிள்ளி யின்பெயர், 'சேட்சென்னி நலங்கிள்ளி' உ௭; 'சேட்சென்னி நலங்கிள்ளி கேட்குவன் கொல்லென' உ௨௫.

சேப்ப - தங்க, 'கான மஞ்ஞை கணனொடு சேப்ப' க௨எ.

சேய்-முருகக்கடவுள், 'செருமிகுசேஎய்' க௪.

சேர்ப்பன் - நெய்தனிலமுடையவன், 'படிமிழ் பணிக்கடற் சேர்ப்ப னென்கோ' ௪௧.

சேர்ப்பு-கடற்கரை, 'பிறங்குநீர்ச் சேர்ப்பினும் புள்ளொருங் கெழுமே' ௪௧.

சேர்பு - பொருந்தி, 'மழகளிறு கந்து சேர்பு நிலைஇவழங்க' உஉ.

சேர்மின் - அடையும், 'தம்மரண்சேர்மின்' க.

சேறு - செறிவு, 'தலையோர் நுங்கின் றீஞ்சேறு மிசைய' உ௨௫.

சேறும் - செல்லுதும், 'சேறும் வாழியோ பெரும்பெயர்ப் பறம்பே'க௧௬.

## சொ.

சொலிய - களையவேண்டி, 'புறவி னல்லல் சொலிய' ௬௧; 'பண்டைச் சாகாட் டாழ்ச்சி சொலிய' [illegible]

சொன்றி - சோறு, 'புன்புல வரகின் சொன்றியொடு பெறூஉம்' க௬எ.

## சோ.

சோரும் - வடியும், 'அயறுசோரு மிருஞ் சென்னிய' உஉ.

ஞமலி-நாய், 'தொடர்ப்படு ஞமலியின்' எ௪.

ஞமன் - சமன், யமன், 'தெரிகோல் ஞமன்ன்போல' ௬.

## ஞா.

ஞாண் - நாண், 'சாப நோன்ஞாண்' க௪; 'ஓங்குமலைப் பெருவிற் பாம்பு ஞாண் கொளீஇ' ௫௫.

ஞாயில் - மதிற்சூட்டு, 'மீன்பூத் தன்ன வுருவ ஞாயில்' உக.

ஞாயிறு - சூரியன், 'நின்கடற் பிறந்த ஞாயிறு' உ; 'செஞ்ஞா யிற்றுக் கவினை' ௪; 'ஒண்கதிர், ஞாயிறு' ௬.

ஞான்ற - வீழ்ந்த, 'பட்ட மாரி ஞான்ற ஞாயிற்று' அஉ.

ஞிமிறு - தேனீ, 'வரிஞிமி றார்க்கும் வாய்புகு கடாம்' க௬.

ஞெமல-பரக்க, 'வரிமணன் ஞெமல' ௯௦.

ஞெலிதல் - கடைதல், 'தான்ஞெலி தீயின் விரைவினன் சுட்டு' க௫௦.

ஞெலிதீ - கடைந்துகொள்ளப்பட்டதீ, 'கானவர் பொத்திய ஞெலிதீ [illegible] கத்து' உ௪௭.

ஞெள்ளல் - தெரு, 'கலித்தேர் கழித்த ஞெள்ளல்' க௫.

தகடு - புறவிதழ், 'மாத்தகட் டொள்வீ தாய துறுகல்' உ0உ.
தகடூர் - ஓரூர், ரு0.
தகரம் - ஒருமரம், 'தகரத் தண்ணிழற் பிணையொடு வதியும்' கருஉ.
தகவு - தகுதி, 'காணுத்தக வுடைத்தே' [redacted].
தகுதி - தக்கசெய்கை, 'தகுதி கேளினி மிகுதி யாள' கஅ.
தகை - அழகு, 'தகைமாண் வழுதி' ருக. கூறுபாடு, 'வான்றடைக்குந் தகைய போல' ஙஅ. தகுதி, 'தகைமாண் குடுமி' ரு. ௬
தகைத்த - கட்டப்பட்ட, 'நுண்கோற் றகைத்த தெண்கண் மாக்கிணை' எ0.
தகைத்தல் - சுற்றுதல், 'தகைத்தார்' ருகூ.
தங்கால் - திருத்தங்காலென்னுமோரூர், [redacted].
தசும்பு - குடம், 'துணைபுண ராயமொடு தசும்புடன் றொலைச்சி' உஉ௪. மிடா, 'தயிர்கொடு வந்த தசும்பு' ருரு.
தஞ்சம் - எளியது, 'முரசுகெழு தாயத் தரசோ தஞ்சம்' எரு. எளியேன், 'யானோ தஞ்சம்' ரு௪.
தட்கும் - தடையாகிற்கும், 'ஒக்கல் வாழ்க்கை தட்குமா காலே' ககரு.
தட்டை - கிளிகடிகருவி, 'புனவர் தட் [redacted] புடைப்பின்' ௬க.
தட்டோர்-தடைப்படச்செய்தோர், 'தட் டோ ரம்ம விவட்டட் டோரே' [தன்-பகுதி]. கஅ.
தட்ப - தடுப்ப, 'புள்ளிடை தட்ப' கஉ௪.
தட - பெருமை, 'தாடோய் தடக்கை' க௪.
தடவரல் - வளைவு, 'தடவரல் கொண்ட தகைமெல் லொதுக்கின்' கருரு.
தடவு - ஓமகுண்டம், 'வடபான் முனிவன் தடவினுட் டோன்றி' உ0க. சுனை, 'தடவுவாய்க் கலித்த மாயிதழ்க் குவளை' க0ரு. பெருமை, 'தடவு நிலைப்பலவு' க௪0; 'தடவுச்சினைப் பல்பழம்' ககக.
தடி - வன்றடி, 'என்பொடு தடிபடு வழியெல்லா மெமக்கீயு மன்னே' உருரு. தசை, 'புலவுநாற்றத்த பைந் தடி' க௪.
தடியும் - வெட்டும், 'கடிமரந் தடியு மோசை' ருரு.
தண்டம் - தண்டனை, 'தண்டமுந் தணிதி' க0.
தண்டா - தணியாத, 'தண்டா வீகை' ரு.
தண்மை - குளிர்ச்சி, 'தண்பொருனைப் புனற்பாயும்' கக; மென்மை, 'தண் குரவை' உ௪.
தண்ணுமை - முழவு, 'விசியுறு தண்ணுமை' அக.
தணிதி - தணிவை, 'தண்டமுந் தணிதி' க0.
ததும்ப - நிரம்ப, 'ததும்ப வைகி' கஎஎ. மிகவொலிப்ப, 'ஈர்ந்தண் முழவின் பாணி ததும்ப' கக௪.
ததைய - சிதற, 'அருஞ்சமந் ததைய' கூரு; 'அருஞ்சமந் ததையத்' கஉரு.
தந்து - கொ(ண்)டு, 'ஆரெயில் பலதந்து' ரு.
தப்பிய - பிழைத்த, 'பார்ப்பார்த் தப்பிய கொடுமை யோர்க்கும்' ரு௪.
தபுதி - அழிவு, 'புறவின் றபுதியஞ்சி' ௪ரு.
தம்மென - தாருமென, 'இன்னுந் தம்மென வெம்மனோ ரிரப்பின்' உ0ரு.
தமர் - தனக்குச்சிறந்தோர், 'தமர்தற் றப்பி னதுநோன் றல்லும்' கருஎ.
தமித்து - தனித்து, 'நூறுசெறு வாயினுந் தமித்துப்புக் குணினே' கஅ௪.
தரீஇய - தரவேண்டி, 'ஆர்கலியாணர்த் தரீஇயகால் வீழ்த்து' உ0ரு.
தரூஉந்து - தரும், 'எல்வளை மகளிர் தலைக்கை தரூஉந்து' உ௪.
தரூஉம் - தரும், 'பொருபடை தரூஉங் கொற்றமும்' ருரு.
தலை - இடம், 'பெருங்கை யானையிரும் பிடர்த்தலை யிருந்து' ரு.
தலைஇய - தலைப்பட்ட, 'வளித்தலைஇய தீயும்' உ; பெய்துமாறிய, 'கார்ப்பெய றலைஇய' ககரு.
தலைக்கை - முதற்கை, 'தலைக்கை தரூஉந்து' உ௪.
தலைக்கொண்ட - தன்னிடத்தேகொண்ட, 'நிலந்தலைக் கொண்ட......நளைம் பதின்மரும்' உ.
தலைக்கொண்டென - தொடங்கிற்றாக, 'சாறுதலைக் கொண்டென' அஉ.

தலைப்பாடு - நேர்படுதல், 'தலைப்பா டன்றவ னீகை' ௭௦.
தலைப்போகன்மையின் - முடிவுபோகாமையின், 'தலைப்போ கன்மையிற் சிறவழி மடங்கி' ௨௨௩.
தலைமயங்கிய - கைகலந்த, 'தமிழ்தலை மயங்கிய தலையாலங் கானத்து' ௧௧.
தலையாலங்கானம் - தலையாலங் காடென்னுமூர், 'தமிழ்தலை மயங்கிய தலையாலங் கானத்து' ௧௧; இதன் வரலாற்றை, 'ஆலங்கானம்' என்பதிற் [illegible]ண்க.
தவல் - இறந்துபடுதல், 'அவல மறுசுழி மழுகலிற் றவலே நன்று' ௨௩௮.
தவழ - பரக்க, 'எரிதவழ' ௩௮.
தவிரா - ஒழியாத, 'தவிரா வீகை, ௩.
தழீஇ - தழுவி, 'நோய்ப்பால் விளிந்த யாக்கை தழீஇ' ௯௩. அணைத்துக் கொண்டு, 'ஒருபுடைத் தழீஇ' ௭௩௫.
தழீஇய - அணைத்துக்கொண்ட, 'சிறுமறி தழீஇய தெருநடை மடப்பிணை' ௨௩.
தழும்பனூர் - ஓரூர், 'பாண்சேரி வாய்மொழித் தழும்பனூ ரன்ன' ௩௪௮.
தழை - மகளிரணியும் ஒருவகையுடை; இது மலராலும் தளிராலும் செய்யப் படுவது, ௧௧௯, ௨௪௮.
தள்ளாதோர் - தளையாதவர், 'தள்ளா தோரிவட் டள்ளா தோரே' ௧௮.
தளம்பு - சேறுகுத்தி, 'மலங்குமிளிர் செறுவிற் றளம்புதடிந் திட்ட பழன வாளை' ௬௧.

## தா.

தா - வலி, 'தாவி னன்பொன்' ௧௫௨.
தாக்கி - வெட்டி, 'அருஞ்சமந்ததையத் தாக்கி' ௧௨௬.
தாங்க - பிடிக்க, 'முன்புதூரந்து சமந் தாங்கவும்' ௧௪.
தாங்கி - தடுத்து, 'வருதார் தாங்கி' ௬௨. பொறுத்து.
தாங்கிய - தடுத்த, 'எழூஉத் தாங்கிய கதவு' ௯௭.
தாயம் - உரிமை, 'மலர்தாயத்து' ௧௭; 'முரசுகெழு தாயத் தரசோ தஞ்சம்' ௭௩.
தார் - மாலை, 'வண்ண மார்பிற் றருங் கொன்றை' ௧; 'சிலைத்தார் மார்ப' ௧௦; 'சிலைத்தா ரகலம்' [illegible] முன்படை, 'ஒண்படைக் கடுந்தார் முன்பு தலைக் கொண்மார்' ௧௫; 'வருதார் தாங்கி' ௬௨.
தாரம் - பலபண்டம், 'கடற்பஃ றாரத் த நாடுகிழ வோயே' ௩௦.
தாலம் - உண்கலம், 'பெருந்தோ [illegible]ம் பூசன் மேவர' ௧௨௦.
தாலி - ஐம்படைத்தாலி; இஃது இளமைப்பருவத்திற் கழுத்திலணியும் [illegible] அணி, 'தாலி களைந்தன்று மிலனே' ௭௭
தாழை - தெங்கு, 'குலையிறைஞ்சிய கோட்டாழை' ௧௭.
தாள் - முயற்சி, 'தாளிற் றந்து' ௧௮; மதனுடை நோன்றாள் ௧௫; 'தாளிற் கொள்ளலிர்' ௧௦௧.
தானை - சேனை, 'நிலவரை சூட்டிய நீ ணெடுந் தானை' ௨௨௮.

திகழ்தல் - விளங்குதல், 'மீன்றிகழ் விசும்பு' ௨௫
திங்கள் - சந்திரன், 'பன்மீ னாப்பட் டிங்கள் போலவும்' ௧௩. மாதம், 'திங்கள் வலித்த காலன் னோனே' ௮௭.
திணிந்த - செறிந்த, 'மண்டிணிந்த நிலனும்' ௨.
திணை - குடி, 'ஆடுகுடி மூத்த விழுத்திணைச் சிறந்த - வாளின் வாழ்நர்' ௨௪; 'வேற்றுமை யில்லா விழுத்திணைப் பிறந்து' ௨௭; விழுத்திணைப் பிறந்த - விசைமேந் தோன்றல்' ௧௫௧.
தித்தன் - ஒரு சோழன், 'போரருந் தித்தன் காண்கதில்' ௮௦; 'மாவண் டித்தன் வெண்ணெல் வேலியுறந்தை யன்ன' ௩௫௨; 'சிறுகண் யானைப் பெ நலருந் தித்தன்' ௩௯௫.
திமிரி - திமிர்ந்து, 'எச்சி லீர்ங்கை விற் புறந் திமிரி' ௨௫௮.
திமில் - மீன்படகு, 'திண்டிமில் வன்ப ரதவர்' ௨௪; 'முந்நீர் காப்பட் டிமிற் சுடர் போல' ௬௦.
திரங்கி - உலர்ந்து, 'ஒளிறுவாண் மன் [illegible] றொண்சுடர் கெடுகர் - வெளிறு கண் போகப் பன்னாட் டிரங்கி' ௧௭.
திரங்கிய - உலர்ந்த, 'பசிதினத் திரங் கிய கசிவுடை யாக்கை' ௧௬௦.
திரியினும் - வேறுபடினும், 'நால்வேத நெறிதிரியினும்' ௨.

திரியீர் - வேறுபடீர், 'உடனிலை திரியீ ராயின்' ருஅ.
திருகி - முறுகி, 'விசும்புதீப் பிறப்பத் திருகி' கூஎ.
திருகிய - முறுகிய, 'சினந்திருகிய' உரு.
திருத்தி - செவ்விதாக்கி, 'கொடிது க டிந்து கோறிருத்தி' கஎ.
திருவில் - இந்திரவில், 'திருவி லல்லது கொலைவி லறியார்' உ0.
திரைக்கும் - சுருட்டும், 'நிலந்திரைக் குங் கடற்றானை' கூஎ.
தில்லை - ஒருமரம், 'தில்லை யன்ன புல் லென் சடையோன்' உருஉ.
திளைப்ப - விளையாடாநிற்க, 'இளையர் திளைப்ப' உருகூ.
திறத்தல் - திறத்தல் செய்வாயாக, 'அ றவை யாயி னினதெனத் திறத்தல்'

திறம் - கூறுபாடு, 'நிற்றிறஞ் சிறக்க' சு. பக்கம், 'பெண்ணுரு வொருதிற னாகின்று' க.
திறல் - வலி, 'துன்னருந் திறல்' கூ; 'துன்னருங் கடுந்திறல்' கூக.
திறவோர் - கூறுபாடறிவோர், 'திற வோர் - காட்சியிற் றெளிந்தனம்' ககஉ.
தின்மென - திண்மினென, ரொக்கலொடு தின்மெனத் தருதலி ன்' கரு0.

## தீ.

தீஞ்சாறு - இனியசாறு, 'பூங்கரும்பின் றீஞ்சாறும்' உச.
தீஞ்சுளை - இனியசுளை, 'தீஞ்சுளைப் பல வின் பழமூழ்க் கும்மே' க0கூ.
தீட்டி - கோதி, 'கூர்த தீட்டி' சுஉ.
தீது - குற்றம், 'தீதுமருங் கறுமார்' கூரு.
தீநீர் - இனியஇளநீர், 'குவவுத்தாழைத் தீநீரோடு' உச.
தீமை - கொடுமை, 'தீமெய் கண்ட தீமை காணின்' கூ.
தீர்தல் - அறுதல், 'செயிர்தீர் கற்பு' கூ.
தீர்ந்தன்று - தீர்ந்தது, 'புரைதீர்ந் தன் றது' சுஉ.

## து.

துகிர் - பவழம், 'பொன்னுந் துகிரு முத்தும்' உகஅ.
துஞ்சாய் - மடியாய், 'துஞ்சாய் மாறே' உஉ.

துஞ்சுதல் - தங்குதல், 'புலிதுஞ்சு வியன்புலம்' ருச.
துஞ்சும் - தங்கும், 'அறந்துஞ்சுஞ் செங்கோலையே' உ0. தூங்கும, 'மூத்தி றுஞ்சும்' உ.
துடைக்கும் - தடவும், 'வான்றுடைக் குந் தகையபோல' கூஅ.
துணி - துண்டம், 'வெவிற்றுப் பனை

துணியல் - தடி, 'பழன வாளைப் பரூஉ டுணியல்' சுக.
'துன்னல் போகிய துணிவி ்னை' உரு: 'துணிவி லோரே' உகச.
துப்பு - வலி, 'துப்புறுவர்' கக; '[redacted] மான் கோதை துப்பெதிர்ந் தெழுந்த' ருச.
துமிந்து - துணிந்து, 'தூம்புடைத் தடக்கை வாயொடு துமிந்து' கக.
துமிய - துணிய, 'அணங்குடை யரவி னருந்தலை துமிய' உகக.
துய் - பஞ்சு, 'துய்த்தலை மந்தியை' கருஅ.
துயின்மடிதல் - உறங்குதல், 'துயின்ம டிந் தன்ன' கஉசு.
துரந்து - செலுத்தி, 'முன்பு துரந்து' கச.
துரப்ப - செலுத்த, 'ஊக்கந் துரபப' அ.
துவ்வான் - உண்ணுன், 'துவ்வா னாகிய வென்வெய் யோளும்' கருகூ.
துவராபதி - இது பழையவேளிர்களின் நகரம்; இருங்கோவேளுடையது; துவரையெனவும் வழங்கும். 'உவரா வீகைத் துவரை யாண்டு, நாற்பத் தொன்பது வழிமுறை வந்த, வேளி ருள் வேளே' உ0க; இது துவார ஸமுத்திரமென்று இப்பொழுது வழ ங்கப்படுகின்றது. 'அகத்தியனார்... துவராபதிப்போந்து நிலங்கடந்த நெ டுமுடியண்ணல்வழிக்கண் அரசர்பதி னெண்மரையும் பதினெண்குடி வே ளிருள்ளிட்டாரையும் அருவாளரையு ங்கொண்டுபோந்து காடுகெடுத்து நா டாக்கி' எனத் தொல்காப்பியப்பாயிர வுரையிலும், 'மலயமாதவன் நிலங் கடந்த நெடுமுடியண்ணலுழை நா பதியருடன்கொணர்ந்த பதினெண் வகைக் குடிப்பிறந்த வேளிர்க்கும்' என அகத்திணையியல் கூஉ-ம் சூத் திரவுரையிலும் நச்சினார்க்கினியரெழு தியிருத்தல்காண்க.

துவரை - துவராபதி, ௨௦௧.
துவை - உணவின்விசேடம், 'ஊன்றுவை - கறிசோறுண்டு' ௧௪; 'அட்டான்றானுக் கொழுந்துவை யூன்சோறு' ௧௧௩.
துவைத்து - ஒலித்து, 'துவைத்தம்பிற் றுணைதோன்றுவ' ௪.
துழந்த - துழாவிய, 'துடுப்பிற் றுழந்த' ௨௬.
துழந்து - துழாவி, 'இட்டுக் தொட்டுங் கௌவியுந் துழந்தும்' ௧௮௮.
துழவும் - சூழ்வரும், 'மாதிரந் துழவுங்கவலை நெஞ்சத்து' ௧௭௪.
துளங்கல்செல்லாது - தளராது, 'தொல்லோர் மாய்ந்தெனத் துளங்கல்செல் லாது' ௫௮.
துளங்கிய - நிலைகலங்கிய, 'கடிமரந் துளங்கிய காவும்' ௨௩.
துளங்கின - தளர்ந்தன, 'குடைதுளங்கினவே' ௬௨.
துளங்குதல் - அசைதல், 'துளங்கியலாற் பணையெருத்தின' ௧௫.
துறகல் - பொற்றைக்கல், 'மாத்தகட்டொள்வீ தாய துறகல்' ௨௦௨.
துறையூர் - ஓரூர், 'தண்புனல் வாயிற் றுறையூர் முன்றுறை, நுண்பல மணலினும்' ௧௩௬.
துனனம் - தையல், 'இழைவலந்த பஃறுன்னத்து' ௧௩௬.
துன்னல் - அணுகுதல், 'துன்னல் போகிய' ௨௩.

## தூ.

தூஉய் - தூவி, 'உயர்பலி தூஉய்' ௧௪௩.
தூங்க - ஆட, 'பறைச்சீர் தூங்க' ௬௨.
தூங்குதல் - செறிதல், 'தூங்கிருளிறும்பில்' ௩௨௬.
தூங்குந்து - ஆடும், 'தண்குரவைச் சீர் தூங்குந்து' ௨௪.
தூம்பு - துளை, 'தூம்புடைத் தடக்கை' ௧௩.
தூவல் - துவலை, 'தூவற் கலித்த தேம்பாய் புன்னை' ௨௪.
தூவாத - உண்ணாத, 'தூவாக் குழவி போல' ௪.

## தெ.

தெரிகோல் - பொருள்களை ஆராயும் துலாக்கோல், 'தெரிகோன் ஞமன்ன் போல' ௬.
தெரியல் - மாலை, 'பாசிலைத் தெரியல்' ௨௩; 'பொலனறுந் தெரியல்' ௨௯; 'ஆர்புனைதெரியல்' ௮௨.
தெவ்வர் - பகைவர், 'செய்வினைக் கெதிர்ந்த தெவ்வர்' ௬.
தெவ்விர் - பகைவிர், 'களம்புகலோம் புமின்றெவ்விர்' ௮௭.
தெவிட்டும் - அசையிடும், 'வன்கலை தெவிட்டும்' ௧௬௧.
தெற்றி - திண்ணை, 'இலங்குவளை மகளிர் தெற்றி யாடும்' ௫௩; வேதிகை, 'குறுந்தொடி மகளிர் - பொலஞ்செய் கழங்கிற் றெற்றி யாடும்' ௩௬.
தெறல் - அழித்தல், 'வலியுந் தெறலுமளியு முடையோய்' ௨; வெம்மை, 'செஞ்ஞாயிற்றுத் தெறலல்லது' ௨௦.
தெறிக்கும் - துள்ளும், 'தாவுபு தெறிக்கு மான்மேல்' ௨௫௧.
தெறித்தல் - துள்ளல், 'தெறிநடை மடப்பிணை' ௨௩.
தெறிப்ப - முற்ற, 'தெறிப்ப விளைந்த தீங்கந் தாரம்' ௨௫௮.
தெறுகதிர் - சுடுகின்றகதிர், 'தெறுகதிர்க் கனலி' ௪௩.
தெறுதல் - சுடுதல், 'தெறுசுடரொண் கதிர் ஞாயிறு' ௬. தண்டஞ்செய்தல், 'கொடியோர்த் தெறுதலும்' ௨௯.
தெறுவர - வெகுட்சிதோன்ற, 'தெறுவர விருபாற் படுக்குநின் வாய்வாள்' ௫௦.
தெறுழ் - காட்டிலுள்ள தோர்கொடி; புளிமாவென்றுமுரைப்பர், 'தெறுழ் வீ பூப்ப' ௧௧௯.
தென்புலவாழ்நர் - தென்றிசைக்கண்வாழ்வோர்=பிதிரர், 'தென்புல வாழ்நர்க் கருங்கடனிறுக்கும் - பொன்போற் புதல்வர்' ௯.
தென்னம்பொருப்பு - பொதியின்மலை, 'தென்னம் பொருப்ப னன்னாடு' ௩௯.
தெனுஅது - தெற்கின்கண்ணது, 'தெனுஅ துருகெழு குமரி' ௬.

## தே.

தேம் - தேயம், 'தெவ்வர் தேஎத்து' ௬. தேன், 'தேம்பாய் புன்னை' ௨௪.
தேர்க்கால் - குயவன் கலம்வனையுந் திகிரி; தேர்க்கால்போன்றிருத்தலின் இப்பெயர்பெற்றது, 'வேட்கோச் சிறாஅர் தேர்க்கால் வைத்த - பசுமண்' ௩௨.

**தேற்றாய்** - தெளியாய், 'தேற்றாய் பெரும பொய்யே' ௫௪.

**தேறலை** - தெளியாய், 'பிறர்பழி கூறுவோர் மொழிதேறலையே' ௪௦.

## தை.

**தைஇ** - செய்து, 'பாணர் சென்னி பொலியத் தைஇ' ௧௨௬.

**தைஇய** - செய்துபுனைந்த, 'கழறைஇய வல்லாளனை' ௫௦ புனைந்துசெய்த, 'வல்லோன் றைஇய' ௯௯.

**தைவருதல்** - தடவிவருதல், 'விசும்பு தைவரு வளியும்' ௨.

## தொ.

**தொகுக்கும்** - திரட்டும், 'தொகுக்குங் கொழுமீன்' ௧௬.

**தொட்டு** - செறித்து, 'கழறொட்டு' ௭௭. தோண்டி, 'மைந்தர் புண்டொட்டு' ௬௨.

**தொடர்** - சங்கிலி, 'தொடர்ப்படு ஞமலியின்' ௭௪.

**தொடி** - பூண், 'தொடித்தலை விழுத்தண்டு' ௨௪௩ வளை, 'ஒண்டொடி மகளிர்' ௨௪; 'தொடிகழித் திடுதல்' ௮௯. வீரவளை, 'தொடித்தோள்' ௨௬.

**தொடுக்குவர்** - வளைத்துக்கொள்வர், 'தமதெனத் தொடுக்குவ ராயின்' ௧௯௫.

**தொடுதல்** - தோண்டுதல், 'தொடுகடல்' ௬.

**தொடுமின்** - பிழிமின், 'நறவுந் தொடுமின்' ௨௬௨

**தொடை** - சந்து, 'தொடைப் பொலிந்த வலிகெழு தோளான்' ௭௮; தொடுத்தல், 'செந்தொடை பிழையா வன்கணுடையவர்' ௩; யாழ்நரம்பு, 'தேஎந் தீந்தொடைச் சீறியாழ்' ௭௦.

**தொண்டி** - இது கடற்கரையிலுள்ளதொரு நகரம், சேரருடையது, 'தண்டொண்டியோ ரடுபொருந'௪௮;'கண்ணறும்மே கானலந் தொண்டி' ௫௮.

**தொலைஇயோன்** - தொலைவித்தோன், 'தொலைஇயோ னிவனென' ௧௨௫.

**தொலைச்சி** - தொலைத்து, 'வெங்கட்டொலைச்சியு மமையார' ௨௬;'தசும்புடன் றொலைச்சி' ௨௨௪.

**தொலைச்சிய** - தொலைத்த, 'மான்கணந் தொலைச்சிய' ௧௯௦.

**தொழில்** - செயல், 'பிறிதுதொழி லறியா வரவலின்' ௧௪.

**தொழுதி** - கூட்டம், 'இரும்பிடித் தொழுதி' ௫௪.

**தொழுவர்** - உழவர், 'நெல்லரி தொழுவர்' ௨௦௯.

**தொன்று** - பழைமை, 'தொன்றிசை' ௨௧௭.

## தோ.

**தோட்டி** - அங்குசம், 'பொன்னியற் புனைதோட்டியால்' ௧௪. ஒருமலை, இ[redacted] கண்டீரக்கோப்பெருநள்ளியுடையது, 'இரும்புபுனைந் தியற்றாப் பெரும் பெயர்த் தோட்டி' ௧௫௦.

**தோடு** - இதழ், 'பொலந்தோட்டுப் பைந்தும்பை' ௨௨. இலை, 'தோடொலிபு நந்தி' ௧௨௦. தொகுதி, 'தோடுகொண் முரசு' ௨௯௮

**தோண்டாது** - பறியாமல், 'மிசைப்பரந் தோண்டாது' ௯௦

**தோய்தல்** - பொருந்துதல், 'தாடோய் தடக்கை' ௧௪.

**தோல்** - கேடகம், 'தோல் துவைத் தம்பிற் றுளைதோன்றுவ' ௪. பரிசை, 'மழையுருவின தோல்பரப்பி' ௧௬; 'தோலகழியொடு பிடிசெறிப்பவும்' ௬௭. யானை, 'தோல்பெயரிய வெறுழ்முன்பின்' ௭.

**தோற்றம்** - காட்சி, 'அறத்து வழிப்படூஉந் தோற்றம் போல' ௯௧.

**தோன்றல்** - தலைவன், 'புகழ்சா றோன்றல்'

## ந.

**நக்க** - சுடுக, 'எரியு நக்க' ௫௭.

**நகர்** - கோயில், 'முக்கட் செல்வர் நகர்' ௬, 'ஒளிறுவாண மன்னரொணசுடர் நெடுநகர்.' நகரம், 'நெடுநகர் வினைபுனை நல்லில்' ௨௯.

**நகாஅல்** - நகுகின்றிலேன், 'நகாஅலெ[redacted] வந்த மாறே' ௨௫௯.

**நகுதக்கனர்** - சிரிக்கத்தக்கார், 'நகுதக்கனரே நாடுமீக் கூறுநா' ௭௨.

[redacted] - மகிழ்ச்சி, 'வாயார் பெருநகை' ௨௧௨.

[redacted] - ஆசை, 'நசைதர வந்தோர் [redacted] பிறக் கொழிய' ௧௫.

**நசைவர்** - விரும்பிவந்தோர், 'நசைவர்க்கு மென்மை யல்லது' ௧௭௦.

**நசைவேட்கை** - நச்சியவிருப்பம், 'நின்னசை வேட்கையி னிரவலர் வருவர்' ௯.

# அரும்பத அகராதி.

நடுக்கு - நடுக்கம், 'நடுக்கின்றி நிலீய ரோ' உ.

நடுங்க - தலையசைத்துக்கொண்டாட, 'சிறியாழ் நயம்புரிந் திறையுநர் நடுங்கப் பண்ணி' கசரு.

நண்ணார் - பகைவர், 'நண்ணார் [redacted] நாடொறுந் தலைச்சென்று' உரு.

நணி - அணிமை, 'திரைபொரு முந்நீர்க் கரைநணிச் செலினும்' கருச.

நம்பி - விரும்பி, 'வாயாரவின னிசைநம்பி' கரு௯.

நயந்து - மகிழ்ந்து, 'நயந்தளித்தல்' ருக. விரும்பி, 'நலனயந் தென்றும் வருஉம்' கசச.

நயம் - இன்பம், 'நயம்புரிந் திறையுநர்' கசரு.

நயவ - நியாயத்தை யுடையன, 'நல்ல போலவு நயவ போலவும்' ருஅ.

நயன் - ஈரம், 'நயனில் கூற்றம்' உஉஎ.

நரந்தம் - நரந்தப்பூ, 'நரந்த நாறுந் தன் கையால்' உருரு.

நரலுதல் - மூங்கிலிலைழச்சொலித்தல், 'ஆடுகழை நரலும்' கஉ0.

நல் - வறுமை; நல்குரவென்பது நல்லெனக் குறைந்து நின்றது; 'நல்குயின் றன்னவெனலகூர் வரிமறை' கக௯.

நல்க - அளிக்க, 'பரிசிலர்க் கருங்கல நல்கவும்' கச.

நல்கி - கொடுத்து, 'பரிசின் மாக்கட்கு வரிசையி னல்கி' ௯.

நல்கினும் - உவப்பினும், 'நல்கினு நல்கா ராயினும்' அ0.

நல்லவர் - பெண்டிர், 'நல்லவர்க் காரணங் காகிய மார்பு' கச

நல்லியக்கோடன் - ஓய்மா நல்லியக்கோடன், 'பெருமா விலங்கைத் தலைவன் சிறியா - ழிலவோர் சொன்மலை நல்லியக் கோடனை' கஎ௯.

நவ்வி - மான்குட்டி, 'சிறுதலை நவ்வி' உ.

நவியம் - கோடாலி, 'வடிநவி னவியம் பாய்தலின்' உரு; 'நெடுங்கை நவியம் பாய்தலின்' ரு௯.

நவியம்பாய்தல் - வெட்டுதல், உரு; ரு௯.

நவிலுதல் - பயிலுதல், 'மறைநவி லந்தணர்' க.

நள்ளி - கண்டீரக்கோப் பெருநள்ளி; இவன் ஒருவள்ளல், 'பிறங்குமலை நள்ளி' கசஅ; 'நளிமலை நாட னள்ளியவ னெனவே' கரு0; 'ஆர்வமுற் - றுள்ளி வருந ருலைவுநனி தீரத் - தள்ளா தீயுந் தகைசால் வண்மைக்-கொள்ளா ரோட்டிய நள்ளியும்' கருஅ.

நள்ளென்மாலை - நள்ளென்னும் ஓசையையுடையமாலை, 'நள்ளென் மாலை மருதம் பண்ணி' கசக.

நளி - குளிர்ச்சி, 'மரம்பிறங்கிய நளிச் சிலம்பு' கரு௯. செறிவு, 'நளியிரு முந்நீர்' ௯௯. பெருமை, 'நளிகடல்' உ௯.

நளிய - செறிவையுடைய, 'நன்மர னளிய நறுந்தண் சாரல்' கரு0.

நற்கு - நன்கு, 'அதுநற் கறிந்தனை யாயின்' ருரு; 'அதுநற்கறிந்தனையாயின்' கஉக.

நறும்புல் - ஒருவகைப்புல், 'நரந்தை நறும்புன் மேய்ந்த கவரி' கருஉ.

நறுமை - நன்மை, 'பொலனறுந் தெரியல்' உக.

நறை - நறைக்கொடி, 'நறைநார்த் தொடுத்த வேங்கையங் கண்ணி' க௯அ.

நன்று - பெரிது, 'நன்று மெல்லிய பெரிய' கச; 'நன்று நொய்தா லம்ம' எரு. நல்வினை, 'சான்றோர் செய்த நன்றுண் டாயின்' ருச.

நன்னன் - ஒருசிற்றரசன், 'பொலந்தேர் நன்னன் மருகன்' கருக.

நனந்தலை - அகன்றவிடம், 'நனந்தலை நல்லெயில்' கரு; 'நனந்தலைப் பேரூர்' ருஎ, 'கழைபயி லனந்தலைக் கறிவள ரடுக்கம்' க௯அ.

## நா.

நாகன் - நாலைகிழான்நாகன், 'திருந்துவே ணாகன்' கஎக.

நாஞ்சில் - கலப்பை, 'நாஞ்சி லொப்ப நிலமிசைப் புரள' கக; நாஞ்சின்மலை, 'செவ்வரைப் படப்பை நாஞ்சிற் பொருந' கருஎ; 'உயர்சிமய வுழாஅ நாஞ்சிற் பொருந' கருக; 'தடவுநிலைப் பலவி னாஞ்சிற் பொருநன்' கச0; 'திஞ்சுளைப் பலவி னாஞ்சிற் பொருந' ருஅ0.

நாட்டம் - ஆராய்ச்சி, 'அறம்புரிந் தன்ன செங்கோ னாட்டத்து' ருரு; 'நாற்ற நாட்டத் தறுகாற் பறவை' எ0.

நாட்டை - நாட்டையுடையாய், 'ஆடுகளங் கடுக்கு மகநாட் டையே' உஅ.

நாடல் - ஆராய்தல், 'நாடல் சான்ற [redacted] ந்திறோய்' கரு.

நாடன்-குறிஞ்சிநிலமுடையோன், 'நாட னென்கோ வூர னென்கோ' சக.

நாடனே - நாட்டையுடையாய், 'கானக நாடனே நீயோ' ரு; 'பெருங்க ணாட னே' கஙஎ.

நாடி - ஆராய்ந்து, 'ஒப்ப நாடி' கO.

நாப்பண் - நடு, 'பன்மீ னப்பட் டிங் கள் போலவும்' கரு; 'முந்நீர் நாப்பட் டிமிற்சுடர் போல' சூO.

நாம் - அச்சம், 'நாம நல்லமர் செய்ய' [redacted]

நாய் - சூதாடுகருவி, 'நாயிடக் குழிந்த - வல்வி னல்லகம்' ருஉ.

நார் - பன்னாடை, 'நார்பிழிக் கொண்ட வெங்கள்' அO; 'நாரரி' உஙஉ.

நாலைகிழவன் - நாலைகிழவனாகன், 'தோ ளா நல்லிசை நாலை கிழவன் - பருந்து பசி தீர்க்கு நற்போர்த் - திருந்துவே ளாகன்' கஎக.

நாவாய் - மரக்கலம், 'முந்நீர் வழங்கு நாவாய்' கங.

நாள் - காலை, 'நாண்மகி ழிருக்கை' உக.

[redacted] - நாளோலக்கம், 'செம்ம னாள [redacted] யண்ணாந்து புகுதல்' ருச.

நாற்றம் - மணம், 'நாற்ற நாட்டத் தறு கால் பறவை' எO.

நிமிர்தல் - மிகைத்தல், 'நிமிர்பரிய மா தாங்கவும்' கச.

நிரயங்கொள்பவர் - நரகத்தைத் தமக்கு இடமாகக்கொள்பவர், 'நிரயங் கொ ள்பவரொ டொன்றாது' ரு.

நிரயம் - நரகம், ரு.

நிணக்கும் - கட்டும், 'கட்டி னிணக்கு மிழிசினன்' அஉ.

நிலவு - நிலைத்தல், 'நிலவுக்கடல் [redacted] ப்பு' ங.

நிலியர் - நிற்பாயாக, 'நடுக்கின்றி நிலி யரோ வத்தை' உ.

நிலீயர் - நிலைபெறுவாயாக, 'நிலீய ரத் தைநீ நிலமிசை யானே' கஙங.

நிலை - நிற்றல், 'பனைநிலை முனைஇ' உங.

நிலைஇய - நிலைபெற்ற, 'வறிது நிலைஇய காயமும்' உO; 'செந்நில் - னெடுவே ணிலைஇய காமர் வியன்றுறை' ருரு; 'வறிது நிலைஇய காயமும்' ஙO.

நிலைஇயர் - நிற்பதாக, 'நின்று நிலைஇயர் நின் னாண்மீன' உச.

நிலையழிந்து - நிலைகலங்கி, 'நவியம்பாய் தவினிலையழிந்து' ஙங.

நிவந்து - ஓங்கி, 'மாக்கட னிவந்தெழுத ரும்' ச; 'உருகெழு மதியி னிவந்து சேண் விளங்க' ஙக.

நிவப்பு - ஓங்குதல், 'நீர்நிலை நிவப்பு' ங; 'நீரழுவ நிவப்பு' கச.

மண்ணக நிழற்ற' ங.

நிழற்றிய - நிழலைச்செய்த, 'வெண்குடை நிழற்றிய' கஅங.

நிழற்றும் - நிழலைச்செய்யும், 'கொடிவி அம்பு நிழற்றும்' க; 'நீமிகின் - மன் னுயிர் நிழற்று நிழலு மில்லை' ருச.

நிற்பின்-நின்றால, 'முந்தை நிற்பின்' கO.

நிறீஇ - நிறுத்தி, 'தம்புகழ் நிறீஇ' கஅ.

நினவ - நின்னுடையனசிலகாரியம், 'நி னவ கூறுவல்' ஙரு.

நீ.

நீர்-தன்மை, 'செந்நீர்ப் பசும்பொன்' ங - தன்மையையுடையது, நீர்த்தோ நினக்கெனு' சங.

நு.

நுணங்கு - நுண்மை, 'நுணங்கு செந்நா வணங்க வேத்தி' உகக.

நுணுகி-மெலிந்து, 'தோணுணுகி' கங

நுதல் - சென்னி, 'குடுமி களைந்த நுதல' எஎ. யானைமத்தகம்; 'புகரணிநுதல்' ங; 'பூநுதல் யானை' கஉ.

நுதி-நுனி, 'நுதிமழுங்கிய வெண்கோடு' ச; 'நுதிமுக மழுங்க' ஙக.

நும்மோரன்ன-நும்மைப்போலும், 'நும் மோ ரன்ன வேந்தர்' சரு; 'நும்மோ ரன்ன செம்மலு முடைத்தே' சஎ.

நுவல - சொல்ல, 'ஈகை நுவல' உச.

நுவலும் - சொல்லும், 'அறத்தாறு நுவ லும்' க

நுழைகல்லா - நுழையாத, 'கதிர்நுழை [redacted] மரம்பயில் கடிமிளை' உக.

நுனை - நுனி, 'கூர்நுனை வேல்' சஉ.

நூ.

நூறி-அறைந்துகொண்டு, 'மூலபொலி [redacted] முருப்ப நூறி' உரு; வெட்டி, 'அருஞ்சமந் ததைய நூறி' கங.

நெ.

நெடியோன் - வடிம்பலம்பநின்றபாண் டியன், 'முந்நீர் விழவி னெடியோன்' க.

நெடுமாவளவன் - சோழன்குளமுற்றத்துத்துஞ்சியகிள்ளிவளவன், 'கொடிநுடங்கு யானை நெடுமா வளவன்' ௨௨௮.

நெடுமானஞ்சி - அதியமான்நெடுமானஞ்சி, 'நெடுமானஞ்சி நீ யருளன் மாறே' ௯௨; 'கடுமான் றோன்ற னெடுமானஞ்சி' ௨௦௬.

நெடுமொழி - வஞ்சினம், 'நெடுமொழி மன்னார்' ௫௪. வீரமேம்பட்டவார்த்தை, 'நெடுமொழி மறந்த சிறுபேராளர்' ௧௭௮.

நெடுவேளாதன் - ஒரு சிற்றரசன், 'நெடுவே ளாதன் போந்தை யன்ன' ௩௩௮.

நெய்தல - சாக்காட்டுப்பறை, 'ஓரி னெய்தல் கறங்க' ௧௯௪.

நெய்தலங்கானல் - இஃது இளஞ்சேட்சென்னியூர், 'நெய்தலங் கான னெடியோய்' ௧௦; இது நெய்தலங்கானலெனவும் வழங்கும்.

நெய்ம்மிதி - நெய்யால்மிதித்துத் திரட்டப்பட்ட கவளம், 'செல்லுடைக் [redacted] ளமொடு நெய்ம்மிதி பெறாஅ' ௪௪.

நெருநை - நேற்று, 'நெருநைப் பகலிடங்கண்ணி' ௨௪௧.

நெளிமருங்கு - குழிந்த இட 'நில னெளி மருங்கின்' ௧௮.

நெளிய - வருந்த, 'பொய்யாச் செந்நா நெளிய வேத்தி' ௧௬௮.

நெறி - ஒழுக்கம், 'நாஅல்வேத நெறி திரியினும்' ௨; முடக்கம், 'நெறி கொள் வரிக்குடர்' ௧௬௦.

## நே.

நே - ஈரம், 'நேஎ நெஞ்சின்' ௩.

நேமி - சக்கரம், 'நேமி யுய்த்த' ௩.

## நை.

நைத்தல் - அழித்தல், 'நாடு நைத்தலின்' ௩௭.

[redacted] - இரங்க, ''நல்கா மையி னைவரச் சாஅய்' ௧௪௬.

## நொ.

நொதுமலாளர் - குறைகூறுவார், 'நொதும லாளர் பொதுமொழி கொள்ளாது' ௩௫.

## நோ.

நோக்கின்று - நோக்கியது, '[redacted] நோக் கின்றோ வன்றே' ௧௪௧.

நோகு - நோவேன், 'நோகோ யானே' ௧௧௬, ௨௩௪.

நோன் - வலி, 'சாப நோன்ஞாண்' ௬௪; 'மதனுடை நோன்றாள்' ௫.

நோன்றல் - பொறுத்தல், 'தமர்தற் றப்பி னதுநோன் றல்லும்' ௧௫௭.

## ப.

பஃறுளி - வடிம்பலம்பநின்ற பாண்டியனாலுண்டாக்கப்பட்டதோராறு, 'முந்நீர் விழவி னெடியோன், நன்னீர்ப் பஃறுளி' ௯.

பகடு - ஏர், 'பகடு புறந்தருநர் பார மோம்பி' ௩௫. கடா, 'பெருமிதப் பகட்டுக்குத் துறையு முண்டோ' ௯௦. பரப்பு, 'பகட்டெழின் மார்பின்' ௧௩:. 'ஆரந் தாழ்ந்த வம்பகட்டு மார்பின்' ௧௫௨. வலி, 'கதிர்விடு நுண்பூ ணம்பகட்டு மார்பின்' ௮௮; 'அலர்பூந் தும்பை யம்பகட்டு மார்பின்' ௯௬.

பகல் - சூரியன், 'பகலிருளினும்' ௨. நடுவுநிலைமை, 'படுவ துண்டு பகலாற்றி' [redacted] பகற்பொழுது, 'பகல்விளங் குதியால்' ௮. பகுத்தல், 'நெருநைப் பகலிடங் கண்ணி' ௨௪௧.

பகழி - அம்பு, 'விழுத்தொடைப் பகழி' ௧௫௨.

பகன்றை - பகன்றைப்பூ, 'பனித்துறைப் பகன்றை' ௨௩௫.

பச்சூன் - செவ்வித்தசை, 'பச்சூன் றின்று' ௨௫௮.

பச்சை - தோல், 'பச்சை நல்யாழ்' ௧௬௪.

பசலை - பொன்னிறம், 'பாழூர் நெருஞ்சிப் பசலை வான்பூ' ௧௫௫.

பசும்பொன் - ஓட்டற்றபொன், 'பாணன் சூடிய பசும்பொற் றாமரை' ௧௪௧.

பஞ்சவர் - பாண்டியர், 'செருமாண் பஞ்சவ ரேறே' ௫௮.

பஞ்சி - பஞ்சு, 'பஞ்சி முன்றிற் சிற்றில்' ௧௨௯.

பஞிலம் - தொகுதி, 'பன்னூ றடுக்கிய வேறுபடு பஞிலம்' ௬௨.

பட்டமாறு - பட்டபடியால், 'பெருந்தகை விழுப்புண் பட்ட மாறே' [redacted]

பட்டன்று - பட்டது, 'மைந்துபட் டன்றே' ௧௩; 'ஆங்குப் பட்டன் றவன் கைவண் மையே' [redacted]

பட்டென - பட்டதாக, 'அறமருப் பெழிற்கலை புலிப்பாற் பட்டென' ௨௩.

பட - மொய்ப்ப, 'வண்டுபட மலர்ந்த' ௨௪.

படப்பை - பக்கம், 'பாசவற் படப்பை' ௬: 'பெரும்புனற் படப்பை' ௯௮; 'தண்புனற் படப்பை' ௧௬௬. மனைப்பக்கம், 'வளைக்கை விறலியர் படப்பைக் கொய்த வடகு' ௧௪௦.

படர் - நினைவாலுண்டாகிய நோய், 'அரும்படர் களைமே' ௧௪௫.

படர்தி - போகின்றாய், 'அன்னோற் படர்தி யாயின்' ௪௮.

படர்ந்து - நினைத்து, 'வள்ளியோர்ப் படர்ந்து' ௪௭; 'நாறிருங் கூந்தற் கிழவரைப் படர்ந்தே' ௧௧௩.

படாஅ - பட்டு, 'படாஅச் செவியர்நின் பகைவர் மீனே' ௨௪.

படியினை - படிவித்தனை, 'காப்புடைய கயம்படியினை' ௧௫.

படுக்கும் - உண்டாக்கும், 'சோறுபடுக் குந் தீயோடு' ௨௦.

படுத்த - வீழ்த்த, 'எறிந்துகளம் படுத்த வேந்துவாள்' ௧௧.

படுத்து - செய்து, 'இடர்ப்படுத் திரீஇய' ௨௪.

படுதல் - விளித்தல், 'படுமணி யிரட்டும்' ௭௨.

படுபு - தோன்றுதல், 'படுபறி யலனே பல்கதிர்ச் செல்வன்' ௩௪.

படுமலை - ஒருவகைப்பாலைப்பண், 'படுமலை நின்ற பயங்கெழு சீறியாழ்' ௧௩௫.

படை - ஆயுதம், 'எயிறு படையாக' ௩; 'ஒண்படைக் கடுந்தார்' ௧௫. குதிரைக்கலம், 'பொலம்படைக் கலிமா' ௧௧௬; 'ஒளிறுபடைப் புரவிய தேரும்' ௧௩௫. கொளுத்து, 'திண்படை கலங்கிச் சிதைதலுய்ந் தன்றே நின் வேல்' ௨௫.

படைத்திசினோர் - படைத்தவர், 'உடம்பு முயிரும் படைத்திசி னோரே' ௧௮.

படைப்பு - செல்வம், 'வாழிய பெரும நின் வரம்பில் படைப்பே' ௨௨.

படைமடம் - வீரரல்லாதார்மேலும் முதுகிட்டார்மேலும் புண்பட்டார்மேலும் மூத்தார் இளையார்மேலும் போர் செய்தற்குச்செல்லுதல், 'படைமடம் படாஅன்பிறர் படைமயக் குறினே' ௧௪௨.

பண்டை - முன், 'பண்டையிற் பெரிதே' ௧௦.

பண்ண - ஏற்ப அமைக்க, 'புனைதேர் பண்ணவும்' ௧௨.

பண்ணன் - சிறுகுடிகிழான்பண்ணன், 'கைவள் ளீகைப் பண்ணன் சிறுகுடி' ௭௦; 'யான்வாழு நாளும் பண்ணன் வாழிய' ௧௭௩. வல்லார்கிழான்பண்ணன், 'வலாஅ ரோனே வாய்வாட் பண்ணன்' ௧௮௧.

பணி - ஏவல், 'வேற்றரசு பணிதொடங்குநின்' ௧௭.

பணியியர் - தாழ்க, 'பணியிய ரத்தை நின் குடையே முனிவர் - முக்கட் செல்வர் நகர்வலஞ் செயற்கே' ௬.

பணை - குதிரைப்பந்தி, 'பணைமுனிந்து - காலியற் புரவி யாலு மாங்கண' ௧௭௮. பெருமை, 'பணையெருத்தின்' ௧௫; 'பாவடிப் பணைத்தாள்' ௭௨. மருதநிலம், 'பெருந்தண்பணை பாழாக' ௬ யானைக்கூடம், 'பணைநிலை முனைஇக் - களிறுபடிந் துண்டெனக் கலங்கிய துறையும்' ௨௩.

பதத்தை - செவ்வியையுடையாய், 'இன்சொலெண் பதத்தை யாகுமதி' ௪௦

பதம் - உணவு, 'பெருஞ்சோற்று மிகுபதம் வரையாது கொடுத்தோய்' ௨; 'கொள்பத மொழிய' ௨௩. கால், 'எறிபதத்தா னிடங்காட்ட' ௪. காலம், 'எறிபதத்தான்' ௪. செவ்வி, ௪௦; 'கொழுங்கொடி விளர்க்காய் கோட்பத மாக' ௧௨௦; 'பதனன்று புக்கு' ௧௨௪. தாம், 'பெண்டிருந் தம்பதங் கொடுக்கும்' ௧௫௧

பதலை - ஒருகணமாக்கிணையென்னும் பறை, 'நலயா ழாகுளி பதலையொடு சுருக்கி' ௬௪; 'ஒருதலைப் பதலை தூங்க' ௧௦௩, 'பதலை யொருகண் பையென வியக்குமின்' ௧௫௨.

பதுக்கை - கற்குவியல், 'அம்புவிட வீழ்ந்தோர் வம்பப் பதுக்கை' ௩. திட்டை, 'பரலுடை மருங்கிற் பதுக்கை சேர்த்தி' ௨௬௪.

பயந்த - பூத்த, 'சேற்றுவளர் தாமரை பயந்த வொண்கேழ் - நூற்றித ழலர்' ௨௭.

பயம்-பயன், 'பயங்கெழு மாநிலம்' ௫௮.

பயம்பு - குழி, 'மாப்பயம்பின் பொறை போற்றாது' ௧௫.

